கல்கி

KALKI
15.12.85
ரூ 1.50



# செய்யாறு தொகுதியில்

**நமது நிருபர்**

**தே**ர்தலில் போட்டியிடும் தி.மு.க. வேட்பாளர்கள் எவருமே தம்முடைய பெயருக்கு முன்னால் 'கலைஞரின் அன்புத் தம்பி' என்றோ அல்லது 'கலைஞரின் உடன் பிறப்பு' என்றோ போட்டுத்தான் போஸ்டர் 'அடிப்பார்கள். ஆனால் செய்யாறு இடைத் தேர்தலில் போட்டியிடும் தி.மு.க். வேட்பாளர் வ. அன்பழகன், தமது போஸ்டரில் 'ஏழாச்சேரி வாதன் மகன் வ. அன்பழகன்' என்று போட்டிருக்கிறார். ''கலைஞர் பேர் சொன்னா வோட்டுக் 'கிடைக்காதுன்னு உள்ளூர் ஆளின் மகன் என்று சொல்லி வோட்டுக் கேட்கும் நிலைக்குத் தி.மு.க.வினர் வந்து விட்டனர்'' என்று கிண்டல் செய்கிறார்கள் அ.தி.மு.க. பிரமுகர்கள்!

## தி.மு.க. வேட்பாளர் யார்?

படித்தவர், இளைஞர், டில்லியில் தலைமைச் செயலகத்தில் வேலை பார்த்தவர். தமது தந்தைக்காகச் 'சீட்டு' கேட்கச் சென்ற இவரைக் கலைஞர் ''நீ நிற்கிறாயா?'' என்று கேட்டிருக்கிறார். உடனே பதில் 'எஸ்' என்று வரவே, போட்டுவிட்டார்கள்! நல்லவேளையாக அந்தத் தொகுதியில் மூன்று தடவை தி.மு.க., எம்.எல்.ஏ.வாக இருந்தவரும் மிகவும் பிரபல் மனிதருமாகிய புலவர் கோவிந்தனின் ஏகோபித்த ஆதரவும் அன்பழகனுக்குக் கிடைத்திருக்கிறது. இரண்டு முறை தி.மு.க. எம்.எல்.ஏ. வாக இருந்தவரும், 1984 தேர்தலில் அ.தி.மு.க.விடம் தோற்றவருமாகிய பாடி ஜனார்த்தனத்தின் முழு ஆதரவும்கிடைத்திருக்கிறது. ஆக கோஷ்டிப் பூசல் ஒத்துழையாமை இதெல்லாம் அறவே கிடையாது.



• கலைஞருடன் தி.மு.க. வேட்பாளர் அன்பழகன்.

• 'குப்பனோ, சுப்பனோ' வோட்டு எம்.ஜி. ஆருக்குத் தான்!





* **தேர்தல் வரை சத்துணவு சரியாகப் போடுகிறார்களா என்று சோதனை நடத்த அரசு ஜீப்பில் வந்துள்ளனர் அதிகாரிகள்.**

**முறையான வேலை**

காலையில் ஏழு மணிக்கே வாக்குக் கேட்கக் கிளம்பி விடுகிறார் அன்பழகன். தொகுதியில் உள்ள இருநூறுக்கும் மேற்பட்ட கிராமங்களில் பாதிக்கு மேல் ஐந்து நாட்களில் 'கவர்' செய்துவிட்டார். கலர், போஸ்டர் ஒட்டுவது, பொதுக் கூட்டம் போடுவதில் நம்பிக்கை இல்லை. வாக்காளர்களுடன் நேரடித் தொடர்பு. ஏழாச்சேரி வாதன் மகன் என்பதாலும், புலவர் கோவிந்தன் ஆளாக இருப்பதாலும் அதற்கு மேல் தி.மு.க. வேட்பாளர் என்பதாலும் இவரைப் பார்த்தவுடன் வாக்காளர்கள் 'உங்களுக்குத்தான் எங்கள் ஓட்டு' என்று சொல்கிறார்கள். ஆனால் முடிவான நிலைமையைத்தான் ஒவ்வொரு தேர்தலிலும் நாம் கண்டு வருகிறோமே!

**அ.தி.மு.க. வேட்பாளர்:**

குப்பன் என்று தொண்டர்களால் பாசத்துடன் அழைக்கப்படும் குப்புசாமி, இறந்து போன அ.தி.மு.க. எம்.எல்.ஏ. முருகனின் நண்பர். கட்சியின் ஆரம்ப காலத்திலிருந்தே தொண்டர். ப.வு.ச. கோஷ்டியைச் சேர்ந்தவர். 'சீட்' கேட்க எம்.ஜி.ஆரிடம் சென்ற இவரிடம், எம்.ஜி.ஆர். "என்ன பணம் வெச்சிருக்கே, சீட்டு கேட்கிறாயே?" என்று கேட்டிருக்கிறார். அதற்குக் குப்புசாமி, "எனக்கு ஐந்து பெண்கள். எந்தச் சொத்தும் கிடையாது. என்னிடம் உள்ள ஒரே சொத்து உங்க படம்தான்" என்று கூறியிருக்கிறார். நெகிழ்ந்து போன எம்.ஜி.ஆர்., குப்புசாமிக்கே 'சீட்' கொடுத்துவிட்டார்.' தனிப்பட்ட முறையில் தி.மு.க. வேட்பாளருடன் ஒப்புநோக்கும்போது இவரின் நிலை சற்றுக் கீழே இருந்தாலும், ஆள் பலம், அதிகார பலம், சத்துணவு பலம் போன்றவற்றால் மேலே நிற்கிறார்!

**கோஷ்டிகள்:**

அ.தி.மு.க. வில் நிலவும் கோஷ்டிப் பூசல் உலகம் அறிந்த விஷயம். விஸ்வநாதன், குலசேகர பாண்டியன், செய்யாறு நகரச் செயலாளர் தேவராஜ் ஆகியோர் புரட்சித் தலைவியின் கோஷ்டி. குப்புசாமியோ ப.வு.ச. கோஷ்டி. தங்கள் ஆளுக்கு 'சீட்' தரவில்லை என்று ஒதுங்கியே இருக்கிறார்கள் ஜெ. ஆட்கள். இது தவிர சாராயக்கடை ஏஜென்ஸி கேட்டுக் கிடைக்காத அ.தி.மு.க. ஆட்கள் உற்சாகமாக வேலை செய்யவில்லை. இவர்களில் ஒரு தலைவர், சாராய ஏஜென்ஸி கிடைக்காததால் கட்சிக் கொடிக் கம்பத்தையே வெட்டி வீழ்த்திவிட்டாராம்!

**அ.தி.மு.க.வின் பிரசாரம்:**

ஐந்து வாக்குச் சாவடிகளுக்கு ஒரு எம்.எல்.ஏ. என்ற கணக்கில் பொறுப்பெடுத்துக் கொண்டு வேலை செய்கிறார்கள். செய்யாறு பயணிகள் மாளிகை, மந்திரிகளின் வரவால் கலகலப்பாகிக் கொண்டு இருக்கிறது. அங்கிருந்து தினமும் எம்.ஜி.ஆர். படங்கள் கொண்ட வீடியோ—கேசட்கள் கிராமங்களுக்கு அனுப்பப்படுகின்றன. மந்திரி முத்துசாமி தலைமையில் தேர்தல் பிரசாரம் நடக்கிறது. இதுவரை பதினொரு டவுன் பஸ்களைச் செய்யாறு வட்டாரத்தில் விடச் செய்திருக்கிறார். 'இதெல்லாம் 16ம் தேதி (எலெக்ஷன்) வரைதான்' என்று பஸ் கண்டக்டர்களே சொல்லிக்கொள்கிறார்கள். வெள்ள நிவாரணம் என்று எக்கச்சக்கமான பணம் செய்யாறு தொகுதியில் வழங்கப்பட்டிருக்கிறது. இது தவிர வேட்டி சட்டைகள் வேறு. இதில் மிகவும் வேதனையான சமாசாரம் என்னவென்றால், இந்தப் பணமும்,



* 'என்னப்பா! என்ன விலைக்கு வாங்கறாங்க?' — அமைச்சர் ராஜாராம்.

வேட்டி புடவையும் ஏதோ ராமாவரம் தோட்டத்திலிருந்து நேரே கொண்டு போய்க் கொடுப்பது போல அ.தி.மு.க.வினர் பிரசாரம் செய்வதுதான். அதைவிட வேதனை, படிப்பறிவில்லாத மக்கள் அதை அப்படியே நம்பி விடுவதுதான். "வெற்றி பெறுவதில் சந்தேகமில்லை" என்று சொன்னார் அ.தி.மு.க.பிரமுகர் ஒருவர். "ஆனா இந்தமந்திரிங்க வராங்க பாருங்க, அவுங்க பின்னாடி போறதுக்கே நேரம் சரியா இருக்குதுங்க. அவுங்க வாராமல் போனா இன்னும் நிறைய ஊர்களைச் சுற்றி வந்து வாக்குக் கேட்கலாம்" என்றார். செய்யாறு வட்டாரத்தில் நாங்கள் சுற்றிக் கொண்டிருந்தபோது கண்ணுக்குத் தெரிந்தவை அ.தி.மு.க. வேன்கள், கார்கள், கொடிக்ள், போஸ்டர்கள், பேனர்கள்தான். நிதி வசதி இல்லாததால் தி.மு.க. இந்த விஷயங்களில் 'கோட்டை' விட்டிருக்கிறது.

அமைச்சர் ராஜாராமின் தேர்தல் பிரசாரத்தின்போது செல்லும்வாய்ப்புக்கிடைத்தது. அமைச்சர் நடந்து கொள்ளும் விதமே அலாதிதான். "என்ன.... பசங்க என்ன பண்ணிட்டிருக்காங்க....?" என்று வாக்காளர்களுடன் ஒரு தனிப்பட்ட தொடர்பை ஏற்படுத்திக் கொள்கிறார். இப்படித்தான் திருமணி என்ற ஊருக்கு அருகில் சென்றுகொண்டிருக்கும்போது திடீரென்று காரை நிறுத்தினார். கடகடவென ரோட்டின் கீழிருந்த வயல் வெளியில் இறங்கினார். அங்கு கதிரடித்துக் கொண்டிருந்த பெண்களிடமும், பெரியவர்களிடமும், "என்ன... ஐ. ஆர். 50 தானே இது. என்ன விலைக்கு வாங்கறாங்க?" என்று விசாரிக்கவும், "110 ரூபாய்கொடுக்கிறாங்க" என்றுஒருவிவசாயி சொல்லவும் "நல்ல விலைதான்.... ஞாபகம் வச்சுக்குங்க, ரெட்டை இலை" என்றபடி அமைச்சர் கிளம்பினார். இதில் வேடிக்கை என்னவென்றால் பல இடங்களில் தமது கிராமத்துக்குவந்திருப்பவர் அமைச்சர்என்று மக்களுக்குத் தெரிவதற்குள் அமைச்சர் அந்தக் கிராமத்தை விட்டுக் கிளம்பி விடுவதுதான்! சீசமங்கலம் என்ற ஊரில் அமைச்சர் தெருக்களில் பிரசாரத்துக்குச் சென்ற பிறகு மக்களோடு மக்களாகக் கடைப் பகுதியில் நின்றபோது காதில் விழுந்தது:

ஒருவர்: "என்னங்க. அமைச்சர் வந்திருக்கார் பார்க்கலையா?"

மற்றொருவர்: "அட போப்பா.... எல்லாம் வருவானுக.... எலெக்ஷன் வரைதான். நாம பாக்காத மந்திரியா?"

பல கிராமங்களில், போலீஸ்காரர்கள் சென்று, "யாருக்கு ஓட்டுப் போடப் போகிறீர்கள்?" என்று மக்களைக் கேட்டிருக்கிறார்கள். யாராவது அ.தி.மு.க. ஆட்சியையோ அல்லது எம்.ஜி.ஆரையோ தாக்கிப் பேசினால் அந்த ஆளின் பெயரை 'நோட்' செய்து கொண்டு போகிறார்களாம். பின்னால் அவர்கள் மீது எந்த வித நடவடிக்கையும் எடுக்கப்படாவிட்டாலும்கூட பெயர் குறித்துக் கொள்ளும்இந்தச்செயலேஒருவிதபயத்தைக் கிளப்பி விடுகிறது என்று தி.மு.க. வட்டாரத்தில் சொல்கிறார்கள்.

## பிரச்னைகள்

இந்த இடைத் தேர்தலில், பிரச்னைகள் ஒன்றும் அலசப்படுவதில்லை. சத்துணவுத் திட்டத்தை அமுல்படுத்தும்போது ஏற்படும் குறைபாடுகளைத் தி.மு.க. சொல்லிக் கொண்டிருக்கிறது. ஆசிரியர் பிரச்னை அ.தி.மு.க.வுக்கு எதிராகப் பயன்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு கிராமத்திலும் ஆசிரியர்கள் இருப்பதால் மக்கள் மத்தியில் அ.தி.மு.க.

வின் மீது அதிருப்தி ஏற்பட அவர்கள் காரண மாக இருப்பார்களா என்பதைக் கண்டறியும் படி போலீஸாருக்கு உத்தரவு கொடுக்கப் பட்டுள்ளது. செய்யாறு நகரப் பகுதியைப் பொறுத்தமட்டில் குடி தண்ணீர் பிரச்னை மக்களை வெறுப்படையச் செய்யும் ஒன்று.

1984 தேர்தலின் போது வெற்றி பெற்ற அ.தி.மு.க. எம்.எல்.ஏ. முருகன், தாம் உயிரு டன் இருந்தவரை தொகுதிக்கு எந்த நன்மை யும் செய்தார் என்று சொல்ல முடியாது. இதற்கு மாறாக, நெடுங்காலமாகப் புலவர் கோவிந்தன் முயற்சி செய்து செய்யாறு தொகுதிக்கு வரவிருந்த சர்க்கரை ஆலையை அடுத்த தொகுதியான ஆரணிக்குத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டதாகக் குற்றச் சாட்டு இருக்கிறது. சத்துணவு சரியாகப் போடப்படுகிறதா என்பதைத் தீவிரமாகக் கண்காணிக்கும்படி அதிகாரிகள் வற்புறுத்தப் பட்டிருக்கிறார்கள்.

## ஜாதிகள் தேவையடி பாப்பா

ஒரு லட்சத்திற்கும் மேற்பட்ட வாக்காளர் கள் நிறைந்த இந்தத் தொகுதியில் கிராமப் புறங்களே அதிகம். அதிலும் ஜாதிப் பற்று கொண்ட வன்னியர் பிரிவு மக்களே அதிகம். 1962 முதல் மூன்று தேர்தல்களில் வெற்றி பெற்ற புலவர் கோவிந்தன் முதலியார் வகுப் பைச் சேர்ந்தவர். 1977, 1980 தேர்தல்களில் வென்றவர் நாயுடு வகுப்பைச் சேர்ந்த பாபு ஜனார்த்தனம். ''சென்றதடவைவன்னியரான முருகனை அ.தி.மு.க. வேட்பாளராக நிறுத் தியதாலும் இந்திரா—எம்.ஜி. ஆர். அனு தாப அலை அடித்ததாலும்தான் தி.மு.க. தோற்றது'' என்று தி.மு.க.வினர் சொல் லவே, இந்த முறை தி.மு.க., அ.தி.மு.க. இந்த இரண்டு கட்சி வேட்பாளர்களும் வன்னியர்கள்! 1984 தேர்தலில் வெம்பாக் கம் யூனியனில் 10000 ஓட்டுக்கள் குறை வாக வாங்கியதன் காரணமாகத்தான் தி.மு.க. தோற்றது என்ற எண்ணத்தில் அந்தப் பகுதியைச் சேர்ந்த ஒருவரையே வேட்பாள ராகத் தி.மு.க. போட்டிருக்கிறது என்றும் சொன்னார்கள்.

பிரசாரத்தின் ஆரம்பத்திலேயே 'விஷப் புகை' கிளம்பியிருக்கிறது. இந்த விஷப் புகைக்குக் காரணம் தி.மு.க. காரர்கள்தான் என்று சொல்லப்படுகிறதே என்று பொது மக்களிடம் கேட்டபோது சிரிக்கிறார்கள். ''அதிக சக்தி கொண்ட மெர்க்குரி ஆவி விளக்குப்போடும்போது இதுபோல்பிரச்னை கள் வருவது சாதாரணம். இதற்கு அரசியல் முலாம் பூசுவது அசிங்கம்'' என்றார் ஒளி, ஒலி அமைக்கும் ஒருவர்.

இந்தத் தேர்தலின் முடிவு தி.மு.க.வுக்குச் சாதகமாக அமைவது சாத்தியமே இல்லை என்று கூறப்படுகிறது. வழக்கப்படி 'சத் துணவும் மற்ற திமர்ச் சலுகைகளும் அ.தி. மு.க.வுக்குப் பெருமளவு உதவியாக இருக் கின்றன.

படங்கள்: **தாமு**

**செய்யாறு தொகுதியில் புயல் வேகப் பய ணம் செய்து பொது மக்களில் சிலரைக் கண்டபோது.......**

**வி. சக்திவேல் (செய்யாறு):** இந்தத் தொகு திக்குப்புலவர் செஞ்ச அளவுக்குவேறயாரும்



செய்யமாட்டாங்க. போன தடவை புலவர் நிக்கலே. அ.தி.மு.க. வந்துடுச்சு. தொகுதி மக்கள் நன்றியுடையவர்கள் என்றால்தி.மு.க. வுக்குத்தான் வோட்டுப் போட வேண்டும்.

**பெருங்கட்டூரில் கே. ராஜேந்திரன்:** நான் எப்போதும்இரட்டை இலைதாங்க. சத்துணவு போட்டாரும் என்று சொல்லி அ.தி.மு.க.



வோட்டுக்கேட்பது ஒருவிதத்தில் தவறுதான். எனக்கு எம்.ஜி. ஆரை பிடிக்கும். அதனாலே ரெட்டை இலைக்கே வோட்டு.

**ஜீவகசாமி (வெம்பாக்கம்):** நான் அ.தி. மு.க. இளைஞர் அணியிலே இருக்கேன். உண் மையாச் சொல்லப் போனா இந்த இடைத் தேர்தலைப் பயன்படுத்திக் கொண்டு மக்க ளுக்கு என்னென்ன வசதிகள் செய்து தர முடியுமோ அவ்வளவும் செய்யறோம். ''யோசித்து ஓட்டு போடணும், சத்துணவு சோம்பேறிகளை வளர்க்கும் திட்டம்'' என்ற



பிரசாரமெல்லாம் எடுபடுவதற்கு புகைப் புரட்சியே நடக்கணும்.

**கணேசன் (திருமணி):** குடும்பக்கட்டுப்பாடு ஆபரேஷன் செய்துட்டா லோன் தரு



வோம்னு சொன்னுங்க. ஆனு ஒண்ணும் கொடுக்கலே. முருகனு இருந்தா என்ன, தம்பனு இருந்தா என்ன.... நாங்க போடறது எம்.ஜி. ஆருக்குத்தாங்க!

**தயாளன்:** என்ன ஸார், எங்கேயும் ஊழல் லஞ்சம். வெள்ள நிவாரணம் அளிக்கும் போது கூட கட்சிக்காரனும், அதிகாரிகளும்



எடுத்துக் கொண்ட பிறகு மீதியைத்தான் தருகிறார்கள். அ.தி.மு.க. ஆட்சி வந்த பிறகு சத்துணவு போடுவதைத் தவிர வேறு என்ன உருப்படியான வேலே நடக்கிறது?

**ரஞ்சிதம் அம்மாள்:** எங்க வீட்டுக்காரரு செத்துப் போன பிறகு கொடுக்க வேண்டிய பணத்தை கவர்மெண்டு கொடுக்கலே, தம்பி! ரெட்டை இலேக்காரன் கிட்டக்கூடப் பணம்



கொடுத்தேன், ஏதாவது செய்வான்னு..... ஒண்ணும் பிரயோஜனமில்லே. யாருக்கும் ஓட்டு போடப் போறதில்லே!

**தவக்களே என்னும் ரமேஷ் (முனுகப்பட்டு):** "நான் தறி வேலே செய்றேங்க. 60 ரூபாய் சம்பளம்" என்ற ரமேஷிடம் ஒரு மினி பேட்டி:

நிருபர்: பள்ளிக்குப் போகலேய்யா?

ரமேஷ்: பள்ளிக்குப் போனு எப்படிங்க துட்டு சம்பாதிக்க முடியும்?

நிருபர்: உங்க அப்பா என்ன பண்ருர்?

ரமேஷ்: 'தண்ணி' அடிக்கிருரு. அதனுல அப்பா மேல எனக்குக் கோவம்.

நிருபர்: எம்.ஜி.ஆர்.தானே சாராயக் கடையைத் திறந்தார்? அவர் மேல் உனக்குக் கோபம் இல்லையா?

ரமேஷ்: நீங்க போங்க ஸார்.... கருணுநிதியும்தான் கடையைத் திறந்தார்! இப்ப



எம்.ஜி.ஆர். கடையைத் திறந்தாலும் சாப்பாடும் போடருரே! எம்.ஜி.ஆர். செய்யறது எல்லாம் நல்லதுதான். இப்பப் பாருங்க. வாத்தியாருங்க ஒழுங்காப் பாடம் சொல்லித் தரலேன்னு ஜெயில்ல போட்டிருக்கார்!

(நிருபர் மூர்ச்சித்து விழாத குறையாக நழுவுகிருர்.)




மீனவர்
அரசு அராஜகம்








1985 டிசம்பர் 15
மலர் 44 இதழ் 20
குரோதன கார்த்திகை 30

**கல்கி**



# மீனவ நண்பனா? விரோதியா?

எம்.ஜி.ஆர். நடித்த திரைப்படம் ஒன்றின் தலைப்பு அவரை ''மீனவ நண்பன்'' என்பதாகப் பறைசாற்றியது. அது இப்போது கேள்விக் குறியாகிவிட்டது.

''மெரீனாவை அழகுபடுத்துகிறோம்' என்று சொல்லிக் கொண்டு அங்கு பல நூற்றாண்டுகளாகப் பரம்பரை பரம்பரையாக வாழ்ந்து வரும் மீனவர்களின் படகுகளையும் வலைகளையும் அரசு பறித்துக் கொண்டது. இதனால் அவர்கள் வேலையிழந்து, வருவாய் இழந்து தவிக்கிற நேரத்தில் வெந்த புண்ணில் வேலைச் செருகுவது போல் அவர்களுடைய குடியிருப்புகளுக்கு குடிசை மாற்று வாரியம் வாடகையை வசூலிக்கப் போக மீனவர்கள் கொதித்தெழுந்தனர். நிகர விளைவு: வன்முறை, கலவரம், போலீஸ் தடியடி, துப்பாக்கிப் பிரயோகம்— ஆறு பேர் மரணம். தலைவனை இழந்த குடும்பங்களின் துயரம், அரசியல்வாதிகளின் ஆவேசக் கூச்சல், கூப்பாடு!

தமிழக அரசு ஒருவேளை நீதி விசாரணைக்கு ஒரு கமிஷன் அமைக்கலாம்; அதன் முடிவு தெரியப் பல ஆண்டுகளாகும்; அந்த முடிவை அரசு வெளியிட மேலும் பல ஆண்டுகள் பிடிக்கும்; அல்லது ஒருவேளை அந்த விசாரணையின் தீர்ப்பு வெளியிடப்படாமலே அமுக்கப்படவும் செய்யலாம்!

தமிழக அரசு இன்னொரு காரியமும் செய்யக் கூடும். போலீஸ் அத்து மீறி நடந்ததாக அதன் மீது குற்றம் கண்டுபிடித்து போலீஸ் உயர் அதிகாரிகள் ஓரிருவருக்கு மாற்றல் உத்தரவு தந்து பழி வாங்கலாம். இவையெல்லாம் பிரச்னையைத் திசை திருப்பி அ.தி.மு.க. ஆட்சி பீடம் நழுவப் பார்க்கும் முயற்சிகளாகவே இருக்கும். ஆனால் முதல்வரோ அமைச்சரவையோ பொறுப்பைத் தட்டிக் கழிக்கவோ தப்பி விடவோ முடியாது. வருத்தம் தெரிவிப்பதும், நஷ்ட ஈடு தருவதும் அவசியம் என்றாலும் அவை அந்தக் குடும்பங்களுக்கு நேர்ந்த பேரிழப்பை இட்டு நிரப்பி விடாது.

மெரீனாவை அழகு படுத்துவதை யாரும் வேண்டாம் என்று கூற மாட்டார்கள். ஆனால் அழகுபடுத்த நினைப்பவர்கள் சென்னைக்கு நேற்றைக்கு வந்து குடியேறியவர்கள் என்பதையும் மெரீனா கடற்கரையும் கடலும் பல நூறு ஆண்டுகளாக மீனவர்களுக்கே அனுபவபாத்தியதையாக இருந்திருக்கிறது என்பதையும் மறுக்க முடியாது. அவர்களை அங்கிருந்து விரட்டினால் எங்கே போவார்கள்? வேறென்ன தொழில் தெரியும் அவர்களுக்கு? சில அமைச்சர்களும் அதிகாரிகளும் காலை நேரத்தில் வாக்கிங் போகும்போது கட்டு மரங்கள் அவர்கள் கண்களை உறுத்தினால் அதற்கு இப்படியா நடவடிக்கை எடுப்பது?

நல்லவேளை போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தில் சில மீனவர்கள் மடிந்தாலும் நம் நாட்டில் இன்னும் நீதி செத்து விடவில்லை! புது தில்லி உச்ச நீதிமன்றம் தலையிட்டு, உடனடியாக மீனவரின் கட்டு மரங்களையும் வலைகளையும் திருப்பித் தரவேண்டும் என்று உத்தரவிட்டுள்ளது. அவை பறிக்கப்பட்டிருந்த நிலையில் வேலையிழந்து நின்றவரிடம் குடியிருப்புக்கு வாடகையை வற்புறுத்தி வசூல் செய்ய முயன்றது தவறு என்றும் சுட்டிக் காட்டியுள்ளது.

ஆனால் தமிழக அரசோ இன்னமும் பிரச்னைக்கு அரசியல் சாயம் பூசிக் கொண்டிருக்கிறது! அவர்கள் எண்ணப்படி அந்த மீனவர்கள் எதிர்க் கட்சிச் சார்புடையவர்கள் என்றே வைத்துக் கொள்வோமாயின் அதனாலேயே அரசு அவர்களிடம் மிகுந்த முன்னெச்சரிக்கையுடன் நடந்து கொண்டிருக்க வேண்டாமா? இப்படி பிரச்னைகள் விசுவரூபம் எடுக்கலாம் என்பதை எதிர்பார்த்துப் பண்புடனும், பரிவுடனும் அவர்களை அணுகியிருக்க வேண்டாமா? ''சாணக்கியமா? கிலோ என்ன விலை?'' என்று கேட்பது போலல்லவா இருக்கிறது?

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.



இந்த ஆண்டு கிருஷ்ண கான சபா வழங்கும் 'நிருத்திய சூடாமணி' விருது பெறுகிருர்

# அகிலம் புகழும் அலர்மேல்வள்ளி

"டிக்கெட் எல்லாம் விற்றுப் போய் விட்டது. ஆளை விடுங்கள்' என்று ஐந்து தொடர் நிகழ்ச்சிகளுக்குப் பிறகு போர்டு எழுதிப் போட்டும், முந்நூற்றைம்பது பேர் நடன நிகழ்ச்சியைப் பார்க்க முடியாமல் திரும்பிப் போனார்கள் லண்டனில்.....

முதல் நாள் நிகழ்ச்சிக்கு டிக்கெட்டுகள் ஒரே மணி நேரத்தில் விற்றுப் போயின....

லண்டனுக்குப் புறப்படுவதற்கு முன், வியன்னாவில் தங்கியிருந்தபோது, அமைப்பாளர்கள் செய்த ஃபோன் கால்கள் ஆறு. "தயவு செய்து இன்னொரு நிகழ்ச்சி.... இன்னொரு நிகழ்ச்சி....."

ஒரு நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன்னால், ஓர் அம்மாள் தனது பத்து வயதுப் பெண்ணை அழைத்து வந்து, 'பார்த்தீர்களா எப்படி அழுதிருக்கிறாள்! உங்கள் நிகழ்ச்சியைப் பார்க்க டிக்கெட் கிடைக்காவிட்டாலும், உங்களையாவது பார்த்துவிட்டுப் போகட்டும், தயவு பண்ணி அனுமதியுங்கள்!" என்றார்.

பி.பி.ஸி.யில் அலர்மேல் வள்ளியைப் பற்றி மைக்கேல் மெக்கன்டயர் தயாரித்து வெளியிட்ட டி.வி. படம் அத்தனை பரபரப்பை உண்டாக்கியிருக்கிறது. நம் ஊர் 'கல்கண்டு' முதல், 'லண்டன் டைம்ஸ் லிடரரி சப்ளிமெண்ட்' வரை அலர்மேல் வள்ளியைப் புகழாத பத்திரிகைகள் அநேகமாக இல்லை. அத்தனை உசத்தியா அலர்மேல்வள்ளியின் நடனம்? 'ஆமாம்' என்கிறார்கள் ரசிகர்களும், விமர்சகர்களும்.



**அலர்மேல் வள்ளியிடம் ஆறு கேள்விகள்:**

1. நீங்கள் போகாத வெளிநாடு எது?

சைனா, தெற்கு அமெரிக்கா. 86 ஏப்ரல்—மே—ஜூனில் இருபத்தைந்தாவது முறையாக வெளிநாடு போகிறேன்.

2. சிறந்த ரசிகர்களை எங்கே பார்க்கிறீர்கள்?

கலையின் நுணுக்கத்தை உணர்ந்த சிறந்த ரசிகர்களும் இந்தியாவில்தான். நிகழ்ச்சிகளின் போது வளவளவென்று பேசும்மோசமான ரசிகர்களும் இந்தியாவில்தான்!

3. உங்கள் பொழுது போக்கு?

நிறைய நாவல்கள் படிப்பேன். சீரியஸ் நாவல்கள்தாம். மலைப்பிரதேசங்களில் நடப்பது மிகமிகப்பிடிக்கும். பிரயாணம்செய்வது மிகவும் பிடிக்கும்.

4. மறக்க முடியாத உள்ளூர் அநுபவம்?

சிதம்பரம் நடராஜர் கோவிலில், 'எந்நேரமும் உந்தன் சந்நிதியில்' பாடலுக்கு உணர்ச்சிவசப்பட்டு, மெய்மறந்து ஆடியது.

5. மறக்க முடியாத வெளிநாட்டு நிகழ்ச்சி?

இதாலியில், சிவிதெல்லா என்ற மலை கிராமம், பிரமாதமான இயற்கைச் சூழல். அங்கே எப்படி ரசித்தார்கள் தெரியுமா? நிகழ்ச்சி முடிந்ததும், குழந்தைகள் வந்து என்னை முத்தமிட, பெண்கள் எல்லாம்

என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். வயதான ஒரு பெண்மணி கறுப்பு அங்கி போர்த்துக் கொண்டு, கும்பலை மெல்ல விலக்கிவிட்டு, என் அருகே வந்தாள். முதலில் என்னை வணங்கினாள். பிறகு அடக்கமாட்டாமல் அழுதாள் பாவம். "வாழ்க்கையில் பல துன்பங்களை அநுபவித்து, கடவுள் மீது நம்பிக்கை இழந்திருந்தேன். உன் நடனத்தில் கடவுள் தன்மையைக் கண்டேன். எனக்கு மறுபடி கடவுள் நம்பிக்கை உண்டாகியிருக்கிறது!" என்று கைகளைப் பிடித்துக் குலுக்கினார். கண் ஓரங்களில் நீர் திரண்டிருந்தது.

**கே.** பந்தநல்லூர் பாணியின் சிறப்பு என்ன?

அங்க சுத்தம். அடவுகளில் பல்வேறு வகைகள், செறிவு. அபிநயத்தில் கவிதையுணர்வு தோன்றும் பாவங்கள்.

### அலர்மேல் வள்ளியைப் பற்றி அலர்மேல் வள்ளி

நான் ஆட ஆரம்பித்தபோது எத்தனை போ... எதிர் நீச்சல் போட வேண்டியிருந்தது. "அவளுக்கென்ன! வசதியான குடும்பம்!" என்று... கள். வசதி மட்டும் போதுமா? என்னுடைய உழைப்பும், இந்தக் கலை மீது நான் கொண்ட ஈடுபாடும்தாம் என்னை இன்று இத்த... தூரத்துக்குக் கொண்டு வந்திருக்கின்றன.

எல்லாக் குழந்தைகளும் பாட்டும் பரதமு... கற்றுக் கொள்ள வேண்டும் என்று நினை... வள் நான். பள்ளிக் கூடங்களில், கலை... வுக்கான பயிற்சிவகுப்புகள் கட்டாயம் ந... வேண்டும் என்று நினைப்பவள்.

என் அம்மாதான் என் கடுமையான வி... சகர். 'அம்மாவுக்கு நிகழ்ச்சி திருப்தி அ... ததா?' என்றுதான் நிகழ்ச்சி முடிந்த... முதலில் கேட்டேன்.

### அலர்மேல் வள்ளியின் தோழி பாடகி சுதா ரகுநாதன்

லண்டனில் 1982ல், ஃபெஸ்டிவல் ஆஃப் இந்தியாவில் வள்ளி நடனமாடப் போவதற்கு முன்னால், ரோம் நகரில் பத்து நாள் தங்கியிருந்தோம்.

வள்ளிக்கு சரித்திர சம்பந்தமான புராதன இடங்களைப் பார்ப்பதில் ஆர்வம் அதிகம். இம்மாதிரி இடங்களுக்குப் போகும் பொழுது அவைபற்றிய விவரங்களை எல்லாம் சொல்லுவார். ப்ளேனில் எட்டு மணி நேரம் பத்து மணி நேரம் பிரயாணம் செய்யும் போது கூட சற்றும் போர் அடிக்காது. அத்தனை விஷயங்களை சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருப்போம். எல்லா விவரங்களையும் விரல் நுனியில் வைத்திருப்பார்.

நாட்டியத்துக்குச் சங்கீதத்தின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்தவர். பாடும் போது இந்த இடத்தில் இப்படி நிரவல் செய்யலாமே இப்படிப் பாடலாமே என்று யோசனைக... சொல்லுவார். மனப்பூர்வமாகப் பாராட்... பேசுவார்.

ஒரு தடவை வியன்னாவில், நல்ல க... குளிரில் ஒரு நிகழ்ச்சி முடிந்து சிறு இ...



வெளிக்குப் பின் இன்னொரு நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது. அவ்வளவு கூட்டம். நடந்த இடமோ ஒரு சர்ச். பளிங்குத் தரை. ஜிலீர் என்று இருந்தது. அப்படியும் பனிச்சென்று ஒரு நிகழ்ச்சியை முடித்துவிட்டு, அரை மணி நேரத்துக்குள் உடை மாற்றிக் கொண்டு சற்று ஓய்வெடுத்து அடுத்த நிகழ்ச்சிக்குத் தயாராகி விட்டார். குளிரில் கால்கள் மரத்துப்போனது. ஒவ்வொரு ஐட்டம் முடிந்ததும் சூடான குஷன்களில் கால்களை வைத்துச் சூடு பண்ணிக் கொண்டு வந்து ஆடினார் வள்ளி. மிகச் சிறந்த நடனமணி மட்டுமல்ல, பழகுவதற்கு இனிமையான தோழி.

**கலை விமர்சகரும் ரசிகருமான என். ஆர். பூவராகன்**

பந்தநல்லூர் பாணியை முழுக்க முழுக்கத் தம் நடனத்தில் பரிமளிக்கச் செய்பவர் அலர்மேல் வள்ளி. பதினைந்துக்கும் மேலான 'அடவு'களைத் துல்லியமாகச் செய்து காட்டக் கூடியவர். அங்க சுத்தமும், லய கச்சிதமும் இவரது நாட்டியத்தில் சிறப்புகள். இவரது பாவ வெளிப்பாடுகள் உன்னதமாக இருக்கும்.

சங்கீதம் பயின்று நாட்டியம் ஆடுவதுதான் தனிச் சிறப்பு. முக்தாம்மாவிடம் கர்நாடக இசையும் பயின்று நாட்டியம் ஆடி வருகிறவர் வள்ளி.

வள்ளிக்கு யோகாவிலும் பயிற்சி உண்டு. இவரது நளினமான உடல் அசைவுகளுக்கு இதுவும் ஒரு காரணம்.

வெகு சரளமாக பிரெஞ்சு மொழி பேசுவார் வள்ளி. பிரான்சில் தனது நடனங்களுக்கு பிரெஞ்சில் விளக்கம் சொல்லுவதைக் கேட்டு அவர்களே அசந்து போயிருக்கிறார்கள்.

சந்தேகமில்லாமல், ஒப்புயர்வு அற்ற நாட்டியமணி அலர்மேல் வள்ளி. அப்படி இருந்தும் மிக மிக அடக்கமானவர்.

* * * * *

அமெரிக்காவில் மின்னஸோடா பல்கலைக் கழகத்தில், பேராசிரியர் ஜார்ஜ் க்ளீகர், பரத நாட்டியம் பற்றி இரண்டு வார லெக்சர் டெமான்ஸ்ட்ரேஷன் ஏற்பாடு செய்திருந்தார். அலர்மேல் வள்ளி வெற்றிகரமாக அதைச் செய்துவிட்டு இந்தியா திரும்பியதும், இந்திய அரசுக்கு ஒரு கடிதம் வந்தது அவர்களிடமிருந்து:

"வள்ளி உங்கள் நாட்டின் தேசிய பொக்கிஷம். மறுபடியும் வள்ளியே இங்கு வர வேண்டும்."

பேட்டி, கட்டுரை: **சாருகேசி**

அட்டை வண்ணப்படம்: **யோகா.**

அடுத்த இதழில்...







**சிந்துபைரவி சிறப்புப் பேட்டி!**

**இசை விழா -சுவாரஸ்யமான தகவல்கள்!**

உங்கள்
குடும்பத்தின்
திட்டமிட்ட பரிபூரண உணவு
இப்போது
ஃபேமிலி பேக்கிலே

# சாக்கலேட் சுவை காம்ப்ளான்
# இப்போது 1 கிலோ பேக்கிலே!

இரண்டு 500 கிராம் பேக்குக்குப் பதிலாக வாங்குங்கள் புதிய 1 கிலோ காம்ப்ளான் பேக், 4 ரூபாய் மிச்சமாக்கிடுங்கள்.

காம்ப்ளான் ஒன்றுதான் உங்கள் குடும்பத்தின் ஒவவொருவருககும அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களைக் கொண்டுள்ளது—கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், தாதுக்கள் மற்றும் மிகச சிறந்த புரதமான பால்புரதம் (20%)

உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் அளியுங்கள் இருவேளை காம்ப்ளான்.

ரூ. 4
மிச்சமாக்குங்கள்






**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூரண உணவு**

# கன்னடத்தில் சக்கைப் போடு போட்டது! தமிழில் குட்டுப் பட்டது!



'பந்தனு' என்ற பெயரில கன்னடத்தில் சக்கை போடு போட்ட படம்தான் தமிழில் சூடு போட்டுக் கொண்டிருக்கிறது. திரும்பு கிற இடமெல்லாம் இந்தப் படத்தைப் பற்றிப் பேசுமளவுக்கு ஒரு கவிதையாகப் பரிமளித்து, கர்நாடக மாநில மக்களைக் குளிர்வித்த கதைக் கரு, தமிழ் மக்களின் வயிற்றெரிச்சலை வாரிக் கொட்டிக் கொண்டிருக்கிறது. வசனங்கள் மனப்பாடம் ஆகும் அளவுக்கு இந்தப் படத்தை நான் ஐந்து முறை பார்த்து நெகிழ்ந்திருக்கிறேன். ஆனால் தமிழில்? என்னவோ, சின்னக் குழந்தைகள் பள்ளி ஆண்டு விழாவில் போட்ட நாடகத்தைப் பார்ப்பது போல் அல்லவா இருக்கிறது!

கன்னடத்தில் விஷ்ணுவர்த்தனும், சுஹாசினியும் வாழ்ந்து காட்டியிருந்தார்கள். சுஹாசினியிடம் விஷ்ணு தன் காதலை வெளிப்படுத்தும் அந்த ஒரு இடம் போதும் – கிருஷ்ண ராஜ சாகரில் இதைப் படமாக்கியிருக்கும் விதம், அதை ஒட்டிய மாதிரி அமைந்த வசனங்கள் எல்லாம் தமிழில் மிஸ்ஸிங்.

விடுமுறையில் ஊருக்கு வந்த சமயத்தில் பந்தனு மொழி பெயர்ப்பு என்று ஆர்வத்துடன் ஒரு மூன்று மணி நேரத்தை வீணடித்ததை எண்ணி வருத்தப்படுகிறேன்.

— கே. கணேசமூர்த்தி, பெங்களூர்.

## இதிலும் கொள்ளையா?

தீபாவளியன்று சேலம் செல்லும் வழியில் ஆத்தூர் பஸ் நிலையத்தில் கட்டணக் கழிப்பறைக்குச் சென்றபோது,

''15 பைசா கொடு சார்!''

''10 பைசாதானே போட்டிருக்கு?''

''அது குத்தகைக்காரர் போட்டிருக்கார்.''

''அப்ப நீங்க யாரு?''

''யோவ் சளசளன்னு பேசாம வேலையைப் பாரு!''

அதற்கு மேல் பேசினால் அடித்து விடுவார் போல் தோன்ற 15 பைசா கொடுத்துவிட்டு உள்ளே நுழைய, ''இது கழிப்பறை, 25 பைசா. அந்த மூலைக்குப் போங்க'' என்றார். நிலையத்தில் ஏதோ ஒரு மூலையில் சிறுநீர் கழிக்க இவர்கள் பணம் வசூலிப்பதுகூட பாதகமில்லை; ஆனால் இதிலும் 50 சதம் கொள்ளையா? சிறுநீர் கழித்துக்கொண்டிருந்த போதே சுத்தீகரிப்பவர் ஒருவர் முதுகில் தட்டி தீபாவளி இனாம் கேட்டதை எப்படி சகித்துக் கொள்வது? சேலம், விழுப்புரம், கோவை நிலையங்களிலும் இதே நிலைதான்.

கர்நாடக மாநிலம் போல இதைவிட சுத்தமான கழிப்பறையை இலவசமாக உபயோகிக்க அனுமதிக்காவிட்டாலும், கொடுக்கும் காசுக்கு ஒரு டோக்கனாவது கொடுக்க ஏற்பாடு செய்வார்களா சம்பந்தப்பட்டவர்கள். கொள்ளையை ஓரளவிற்கேனும் தடுக்கலாமே?

— வி. ரமேஷ், பெங்களூர் – 10.

## அரசு ஊழியரிடம் லாட்டரி சீட்டு திணிப்பு!

தமிழக அரசு முன்பு பள்ளி ஆசிரியர்களை சத்துணவுக் கூட சமையற்காரர்களாய் ஆக்கியது போல, இப்போது அரசு ஊழியர்களை 'லாட்டரி சீட்டு விற்பனையாளர்'களாக்கி வருகிறது. தமிழ்நாடு அரசு பரிசுச் சீட்டுக்களைக் கட்டாயப்படுத்தி அரசு ஊழியர்களின் தலையில் கட்டிவிடுகிறார்கள். பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் சாதாரண எழுத்தராகப் பணிபுரியும் ஒருவரிடம் மாதா மாதம் ரூபாய் நாற்பதுக்கு (அல்லது அதற்கு மேல்) லாட்டரி சீட்டுக்களைக் கொடுத்துவிட்டு, சம்பளத்தில் இத்தொகையைப் பிடித்துக் கொண்டு மீதி தொகையைத்தான் கையில் தருகிறார்கள். இச் சீட்டுகளை ஊழியர்கள் விற்க முடிந்தால் விற்றுக் கொள்ளலாமாம்! சம்பளத்தில் P.F. C.T.D., L.I.C., விழாக்கால முன் பணம், கதர் கடன், கோ–ஆப்டெக்ஸ் கடன், இலங்கைத் தமிழர் உதவி நிதி என்று பெரும்பகுதியை இழந்து, கையில் முந்நூறு ரூபாயை வாங்கும் பரிதாபத்திற்குரிய அரசு ஊழியரிடம், ''பிடி லாட்டரி சீட்டு'' என்று ஐம்பது ரூபாயைப் பறிப்பது நியாயமா?

இனிமேல் சாராயக் கடையில் விற்காமல் மிஞ்சிப் போனாலும், அரசு ஊழியர்களின் வாயில் ஊற்றிவிட்டு, சம்பளத்தில் பிடித்துக் கொள்வார்களோ!

— எஸ். ராஜேந்திரன், திருச்சி – 20.

வாசகர் குமுறல்




பொங்கல்
சிறப்பிதழில் ஆரம்பமாகிறது

* கோ. பாஸ்கர், இளங்கார்குடி.

? கடத்தப்பட்ட விமானப் பயணிகளை மீட்பதாகக் கூறிக் கொண்டு எகிப்திய அரசின் படையே அவர்களைப் படுகொலை செய்துவிட்டது பற்றி.....?

! முன்யோசனை இல்லாத, சரியாகத் திட்டமிடப்படாத செயல். அதிரடிப் படைக்குப் போதிய பயிற்சி இல்லை. அவசரப்பட்டு, அள்ளித் தெளித்த அவசர கோலத்தில் இறங்கி, அபகீர்த்தி தேடிக் கொண்டார்கள். என்னதான் சொல்லுங்கள், இது போன்ற காரியங்களில் இஸ்ரேலியருக்கு இணை இஸ்ரேலியரேதான்! என்டபியை மறந்திருக்க முடியாதே! புலியை நினைத்துப் பூனை சூடு போட்டுக் கொண்டதாகிவிட்டதே, மிஸ்டர் முபாரக்!

* எஸ். பி. இராஜேந்திரன், முகிலன்விளை.

? காப்பியங்கள் இப்போது தோன்றுவதில்லையே, ஏன்?

! இப்போதெல்லாம் பல நாவல்களே 'காப்பி'யங்களாகத்தானே இருக்கின்றன!

* சி. சுப்பு, தேரழுந்தூர்.

? செய்யாறு இடைத்தேர்தல் முடிவு எப்படி இருக்க வேண்டும்?

! ஆட்சியில் இருப்பவருக்கு ஓர் எச்சரிக்கையாக அமைவது அவர்களுக்கு மட்டுமின்றித் தமிழ் நாட்டுக்கும் மக்களுக்கும் கூட நல்லது.

* க. தியாகராஜன், நெய்வேலி.

? 80 இலட்ச ரூபாய்க்குத் தமிழக அரசு வாங்கிய ஹெலிகாப்டர் சமயத்துக்கு உதவாமல் பழுதடைந்து கிடப்பது எதைக் காட்டுகிறது?

! பழுதடைந்து கிடப்பது ஹெலிகாப்டர் மட்டுமல்ல; நிர்வாகம் முழுவதுமேதான் என்பதற்கு ஏராள எடுத்துக்காட்டுக்களைக் கூற முடியும் என்றாலும் மனத்தை மிகவும் பாதித்த விஷயம், ஜி. ஹெச். இல் லிஃப்ட்டுகள் பழுதாக, இருதய நோயாளிகளை இரு தினங்களுக்குப் பல மாடிகள் ஏற வைத்தது தான்.

* பிரியதரிசினி, கும்பகோணம்.

? சின்ன வீடு போன்ற மட்டரகமான படங்களைப் பெண்களே ரசிக்கிறார்களே....!

! சில அருவருப்பான ஆபாசக் காட்சிகள் இடம் பெற்றிருப்பது உண்மைதான். மறுக்கவே முடியாது! ஆனால் சின்ன வீடு திரைப்படம் உள்ளடக்கியுள்ள அடிப்படைக் கருத்து, நமது நாட்டில் வாழையடி வாழையாக வந்து வேரூன்றியுள்ள இல்லற தர்மம் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதே. அது நமது பெண்மணிகளைக் கவர்வதில் வியப்பேயில்லை. என்ன பிரமாதம், கோவலன் — கண்ணகி கதைதானே என்று விமர்சகர்கள் அலட்சியமாய்ப் பேசலாம். ஆனால் இளங்கோவுக்குப் பிறகு இங்கே எத்தனையோ கோவலன் — கண்ணகி கதைகள் வேறுவேறு தலைப்புக்களில் எழுதப்பட்டு வெற்றியும் அடைந்துள்ளன. இன்னும் நூறு கோவலன்— கண்ணகி கதைகள் சிற்சில மாற்றங்களுடன் எழுதப்பட்டாலும் வரவேற்பு இருக்கும். சின்ன வீட்டில் உள்ள சில ஆபாசக் காட்சிகளுக்காகப் பெண்கள் தியேட்டர்களை மொய்ப்பதாகக் கருத முடியாது. கல்பனா பாத்திரத்தின் மூலம் பெரும்பாலான குடும்பப் பெண்களின் யதார்த்த நிலையையும், அனு பாத்திரத்தின் மூலம் பெரும்பாலான ஆண்களின் பலவீனத்தையும் பெண் ரசிகர்



# சின்னவீடு போன்ற மட்டரகப் படங்களைப் பெண்களே ரசிக்கிறார்களே?

**நீங்கள் கேட்டவை**
**—தராசு**

களால் ஒருங்கே உணர முடிகிறது. பாக்யராஜ் மனோதத்துவ ரீதியில் சிந்தித்துப் பெற்றுள்ள வெற்றி இது. ஆனால் இதையே ஆபாசமின்றிக் கொடுத்திருந்தால் பாக்யராஜை முழு மனத்துடன் பாராட்டலாம். அது சரி, இந்து மதத்தை யார் இழிவு படுத்தினாலும் பொறுக்க மாட்டோம் என்று சொல்லிக்



* பாட்டிங் ஆர்டரில்.....



..... கோளாறு

கொண்டிருக்கும் அமைப்புக்கள் சின்ன வீடு திரைப்படத்தில் வருகிற மத உணர்வுகளைப் புண்படுத்தும் ஆபாசக் காட்சிகளை எப்படி பொறுத்துக் கொண்டிருக்கின்றன என்பது தான் புரியவில்லை!

* தி. ஜம்புநாதன், பூவாளூர்.

**? தலைவர்கள் எதைச் செய்தாலும் சரி என்று தொண்டர்கள் மனம் பக்குவப்பட்டு விடுகிறதே, எப்படி?**

! நான் சொல்கிறேன் என்பதற்காக ஏற்றுக் கொள்ளாதே. சுயமாகச் சிந்தித்துப் பார். நான் கூறுவது சரி என்று தோன்றினால் ஏற்றுக் கொள். சரியில்லை என்று தோன்றினால் உன் மாற்றுக் கருத்தைச் சொல்லு என்று எந்தத் தலைவன் கூறுகிறான்? தொண்டர்கள் சிந்தித்துவிடப் போகிறார்களே என்று கவலைப்பட்டு அவர்களைச் சிந்திக்க விடாத படிக்கல்லவா பேசி செயல்படுகிறான்! ஆக தொண்டர்கள் மனம் பக்குவப்படுவதாகக் கூற முடியாது; அவர்கள் பிரெய்ன்—வாஷ் செய்யப்படுகிறார்கள்!

* வி. ரமேஷ், பெங்களூர்.

**? மனச்சாட்சிப்படி நடக்கிறோம் என்று கூறிக் கொண்டிருக்கும் உங்களுக்கு இது வரை கிடைத்த பலன் என்ன?**

! மனச்சாட்சிப்படி நடந்தோம் என்ற மனத் திருப்தி கிடைக்கிறதே! அதைவிடச் சிறந்த பலன் ஏது? கோடி ரூபாய் கொடுத்தாலும் இந்த மனத் திருப்தியை யாரும் விலைக்கு வாங்க முடியாதே!

* எஸ். முகைதீன், சீர்காழி.

**? எய்ட்ஸ் நோய் மிகவும் கொடியதாமே, உண்மையா?**

! ஆம். உண்மையிலேயே கொடுமையானது தான். உடலுக்கு இயற்கையாகவே நோய் எதிர்ப்புச் சக்தி இருக்கிறது. எய்ட்ஸ் கண்டவர்கள் இந்த நோய் எதிர்ப்புச் சக்தியை இழந்து விடுகிறார்கள். எனவே ஜலதோஷம், ஃப்ளூ ஜுரம் என்று வந்தால்கூட அவர்களை அது கடுமையாகப் பாதிக்கிறது. அந்த ஜலதோஷத்துக்கோ ஜுரத்துக்கோ தரப்படும் மருந்துகள் ஓரளவுக்குத்தான் உதவுகின்றன. நம்மைப் போல் மருந்துகளின் முழு பயனையும் எய்ட்ஸ் கண்டவர்கள் அடைய முடியாது. எய்ட்ஸ் பரவுவதற்குக் காரணம் நெறி தவறிய காம விகாரப் புணர்ச்சி என்பது கண்டு பிடிக்கப்பட்டது. இவர்களில் சிலருக்கு எய்ட்ஸ் வெளிப்பட இராது. ஆனால் உள்ளூர சுமந்து கொண்டிருப்பார்கள். (carrier). இவர்கள் ரத்த தானம் செய்தால் தானம் பெற்றவர் எய்ட்ஸ் கண்டு அவதிக்குள்ளாகலாம். எனவே ரத்த தானம் செய்ய முன் வருகிறவரின் ரத்தத்தை இப்போது எய்ட்ஸ் கிருமிக்காகவும் சோதிக்கின்றனர் அமெரிக்காவில். இந்தியாவில் நல்லவேளையாக இன்னும் எய்ட்ஸ் தாக்கவில்லை. அப்படி தாக்கினால் ரத்த தானம் எதற்கு, ரத்தம் உறிஞ்சும் கொசு மூலமே எய்ட்ஸ் பரவி விட வாய்ப்பிருக்கிறதே என்ற நியாயமான அச்சமும் பல சிந்தனையாளரிடம் உருவாகியுள்ளது.

* ஆர். சிவராஜ், லால்குடி.

**? ரோத்மன்ஸ் கோப்பையில் இந்தியாவின் தோல்விக்குக் காரணம்?**

! பல என்றாலும் ஒரு சோற்றுப் பருக்கையை மட்டும் பதம் பார்ப்போம். உலகக் கோப்பை ஹீரோவான அமர்நாத் பாகிஸ்தானுக்கு எதிராக 7வது பேட்ஸ்மேனாக அனுப்பப்பட்டார்; மேற்கிந்தியத் தீவினருக்கு எதிராக 3வது பேட்ஸ்மானாக அனுப்பப்பட்டார். இப்படி பாட்டிங் ஆர்டரைப் பல்வாறு கோளாறு செய்ததில் முதல் 15 ஓவரில் இரு ரன்கள் என்றும் முதல் இருபது ஓவரில் 10 மெய்டன் என்றும் ஸ்கோர் போர்ட் காட்டியது. கவாஸ்கரோ ஒரு நாள் கிரிக்கெட்டைப் பொருத்தமட்டில் ஏதொன்றும் அறியேன் பராபரமே! வெற்றி எப்படி கிட்டும்?

* சூரிய நிலா, ஈரோடு—16.

**? செய்யாறு அ.இ.அ.தி.மு.க. வேட்பாளர் அறிமுகக் கூட்டத்தில் விஷ வாயு பரவியதாமே?**

! ஒரு விபத்தாக விஷ வாயு பரவியதை மறுக்க முடியாது என்றாலும், "ஸிலிண்டரில் கொண்டு வந்து விஷ வாயுவைச் 'சிலர்' திறந்துவிட்டிருக்கலாம்" என்று அமைச்சர் முத்துசாமி கூறுவது அதைவிடக் கொடுமையான விஷ வார்த்தைகளைப் பரவ விடுவதாக அல்லவா இருக்கிறது!

***ரூ 10 பரிசு பெறுபவர்:**
**எஸ். முகைதீன்,**
**முகைதீன் மாளிகை,**
**பஸ் ஸ்டாண்டு,**
**சீர்காழி. 609 110.**

* விஷ வார்த்தை?



* புலியை சீண்டு





# 'சபாநாயகர்' யக்ஞராமனுக்கு அமைச்சர் இராஜாராம் பதில்!



### இளைஞர்களை ஊக்குவிப்பவர்

* திரு யக்ஞராமன் அவர்கள் பற்றிய 'கவர் ஸ்டோரி' மிகமிக அருமை. அந்தப் பேட்டியில் விட்டுப் போன ஒரு தகவல்: திரு யக்ஞராமன் அவர்கள் ஏராளமான இளைஞர்களுக்கு ஆதரவு அளித்து, கர்நாடக இசையைப் போஷிக்கிறார் என்பதே அது.

சென்னை – 5. இரா. பாரதி.

* இந்த வாரத்துக் கல்கியில் (1.12.85 இதழ்) கிருஷ்ண கான சபை யக்ஞராமனின் வண்ணப் படத்தை அட்டையிலும் மிக வைதீகமான தோற்றத்துடன், ஒரு லட்ச ரூபாய் தர்ம போதன புரஸ்டுக்கு அளிக்கும் படமும், கருட்டுப் பள்ளி கிராமத்தில் நவம்பர் 71ல்; கார்த்திகை தினத்தன்று, பரமாச்சாரியாள் வேண்டுகோளுக்கு இணங்கி, ஒரே நாளில் நமது நண்பர் ஸ்ரீ யக்ஞராமன் ஏற்பாடு செய்த இன்னிசைப் படமும், பார்த்து மனம் பூரித்தேன். 'கல்கி' மூலமாக நீங்கள் செய்து வரும் தொண்டை மனப் பூர்வமாகப் பாராட்டிக் கோடி ஆசீர்வாதங்கள் செய்கிறேன்.

பம்பாய். டி.வி. ராமாநுஜம்.

### கல்கிக்கு நிகரில்லை

* ஆசிரியர் கிளர்ச்சியில் அரசியல் வேண்டாம் என்ற தலையங்கம் 'டாப்'. தலையங்கம் எழுதுவதில் கல்கிக்கு இணை கல்கிதான். தக்க தருணத்தில், அரசியல் தலையங்கம் ஆகட்டும், பொது பிரச்னைகளை அலசி ஆராய்ந்து எழுதுவதிலும் ஆகட்டும், மிகவும் முன் யோசனையுடன் முன்பின் விளைவுகளைத் தீர்க்கமாக ஆராய்ந்து எழுதுவதில் கல்கி கல்கிதான்.

தர்மபுரி. இரா. சிவராமன்.

### கல்விக்கே 'கேடு'யாகிவிடும்!

* அருமையான தலையங்கம். ஆனால் அரசியலைப் புக வைப்பது யார்? மெத்தனப் போக்குடைய அரசு தான்! எதிர்க்கட்சி ஆதரவு அளித்தவுடன்தான், ஆளும் கட்சி தூக்கம் கலைகிறது. எது எப்படியோ, ஆசிரியர் இனத்திற்குள் தொழிற்சங்கங்கள் நிலை வரக் கூடாது. அது கல்விக்கே 'கேடு'யாகிவிடும்.

சென்னை – 84. பொடுசி.

* 1.12.85 கல்கி இதழில் வெளியாகியுள்ள தலையங்கத்திற்கு என் பாராட்டுதல்கள். 1973ல் பல்லாயிரக் கணக்கான பட்டதாரி ஆசிரியர்களைச் சிறையிலடைத்த தி.மு.க. தலைவர்கள் இன்று ஆசிரியச் சமுதாயத்திற்கு வக்காலத்து வாங்குகிறார்கள். முதலைக் கண்ணீர் வடிக்கிறார்கள். இக்கிளர்ச்சியால் எதிர்க்கட்சிகளுக்கு ஏதேனும் ஆதாயம் கிடைக்குமானால் அதற்குப் பொறுப்பு அரசாங்கத்தின் அலட்சிய மனப்பான்மையே.

திருக்கண்ணபுரம். கே. கோவிந்தராஜன்.

### கன்னியா குமரியைக் கவனியுங்கள்

* கன்னியாகுமரி மக்கள் கண்ணீர் விட்டுக் கதறுவது எங்களுக்கு நன்றாகக் கேட்டு என்ன பயன்? கோட்டையில் உள்ளவர்கள் காதில் அல்லவா விழ வேண்டும்?

கும்பகோணம். பி. சுவாமிநாதன்.

* பல வெளிநாட்டு, உள்நாட்டுப் பயணிகள் பார்க்க விரும்பும் கன்னியாகுமரி இப்படியா களை இழந்து அனாதையாகக் காணப்படுகிறது! இந்த அவலட்சணங்கள் நிறைந்த புகைப்படங்களையும், கட்டுரையையும் ஒரு நகல் எடுத்து நமது சுற்றுலாத் துறைக்கு அனுப்பி வையுங்கள்.

நெல்லிக்குப்பம். எஸ். ஜே. சலீம் தமிஜுதீன்.

### கவிதையில் நகைச்சுவை உணர்வு

* சென்ற இதழில் மாணவர் கவிஞர்கள் எழுதிய கவிதைகளைப் படித்தேன். மிக அருமை. குறிப்பாக என்னைக் கவர்ந்தது "பெண்ணின் புலம்பல்" என்ற கவிதை. அந்தக் கவிதையில் வரதட்சணைக்கும், லஞ்சத்திற்கும் உள்ள சின்ன வித்தியாசத்தை நகைச்சுவை உணர்வுடன் எழுதி உள்ளார்.

வாலாஜாபேட்டை. வெ. திலகவதி.

### வெட்கக்கேடு

* துணிவுடன், தன் பணியில் களங்கம் இன்றி செயல்பட்ட பெண் அதிகாரி கிரேன் பேடிக்கு ஏற்பட்ட நிலை வேதனைக்குரிய ஒன்று மட்டுமல்ல—வெட்கக்கேடானதும் கூட.

சாலிக்கிராமம். என். சம்பத்குமார்.

### விழிப்புள்ள நிருபர்



* பிரதமருடன்கைகுலுக்கிக்கொண்டிருக்கும் அந்தப் பெண்மணியை இவ்வளவு சீக்கிரத்தில் தேடி, அவரைப் பற்றிய விவரங்களைக் கூறிவிட்டாரே உமது நிருபர். மகுஷின் கண்ணிலிருந்துதப்புவதுகஷ்டம்போல இருக்கிறது.

திருவண்ணாமலை. தே. காந்தி.

* 'சபாநாயகர் யக்ஞராமன்' பேட்டியைப் படித்தேன். சேலத்தில், 'நகர நுண்கலைச் சங்கம்' என்ற ஒன்றை ஆடிட்டர் பார்த்தசாரதியும் நானும் சேர்ந்து இசைக் கலையை வளர்ப்பதற்காகத் துவக்கினோம். நாங்கள் எதிர்பார்த்ததற்கு மேலாக 300 புரவலர்களும் 250 ஆயுள் உறுப்பினர்களுமாகச் சேர்ந்தார்கள். ஒருவர் மற்றொருவரை மட்டும் அழைத்து வரலாம் என்று திட்டமிட்டு இருந்தோம். ஆயிரம் பேர் ஒரு இசை நிகழ்ச்சிக்கு வருகிறார்கள். ஆரம்பித்து ஒரு ஆண்டு ஆகிறது. மாதம் ஒரு இசை நிகழ்ச்சி இந்தச் சங்கத்தில் நடக்கிறது. இங்கு எந்த டிக்கெட்டையும் வெளியாருக்கு விற்க முடியாது. காரணம், இந்தச் சபாவில் காலி இருக்கைகளே இருக்காது. சபா முழுவதும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் நிரம்பி வழியும்.

முதலில் இசையோடு நல்ல உணவும் தரலாம் என்று எண்ணினோம். ஆனால் ஆயிரம் பேருக்கு சாப்பாடு போடுவது சரி வராது என்ற எண்ணம் ஏற்பட்டு அந்த திட்டத்தைக் கைவிட்டு தற்போது முழுக்க முழுக்க இசை, நாட்டியம் ஆகியவற்றில் கவனம் செலுத்தி வருகிறோம். நாங்கள் சேர்த்த தொகையை வட்டிக்கு விட்டு அந்த வட்டியிலிருந்து ஒவ்வொரு கலைஞருக்கும் அவர்கள் மகிழும் வகையில் சன்மானம் தந்து, வரவேற்று வழியனுப்பி வைக்கிறோம். இந்தத் தொகையை Fixed Depositல் போட்டு வைத்திருப்பது இந்த சபா தொடர்ந்து நடக்க ஒரு பாதுகாப்பாக இருக்கிறது.

யக்ஞராமன் அவர்கள் சொன்னதைப் போல என்னுடைய செல்வாக்கால் மட்டும் உருவாக்கப்பட்டது அல்ல. சேலத்தில் உள்ள இசைப் பிரியர்களின் ஒத்துழைப்பும் இசையின்பால் அவர்கள் கொண்ட அன்பும் தான் இதற்குக் காரணம்.

சென்னை – 9. க. இராசாராம்,
தொழில்துறை அமைச்சர்.

விவரமறிந்தோர் நாடுவது

# ஆஸ்ப்ரோ ஆறுதல்

இப்போது 2 வித வீரிய வகைகளில் வருகிறது:

**ஆஸ்ப்ரோ , ஆஸ்ப்ரோ 600**



சாதாரண
தலைவலிக்கு




**ஆஸ்ப்ரோ**

மண்டை பிளக்கும்
கடுமையான
தலைவலிக்கு




எக்ஸ்ட்ரா ஸ்ட்ரோங்த்

**ஆஸ்ப்ரோ 600**

daCunha/AS/35/85TM

# சித்தரஞ்சனி

## 20. ஹோமப் புகையா? யமப் புகையா?

சித்தரஞ்சனியைத் தனது புரவியில் ஏற்றிவிட்டுக் கடிவாளத்தைப் பிடித்த வண்ணம் சண்டிகாதேவியின் குகையை நோக்கி நடந்த கௌதமிபுத்ர சதகர்ணி சற்று எட்ட நடந்து வந்து கொண்டிருந்த சேனாதிபதி வஜ்ரபாகுவை அருகில் அழைத்து, ''சேனாதிபதி! போர்களில் ஏற்படும் ஆனந்தத்தைவிட கோவில் பூஜையிலும் மந்திரங்களை ஓதுவதிலிருக்கும் ஆனந்தம் எத்தனை சாந்தியைத் தருகிறது பார்த்தாயா?'' என்று வினவினான்.

வஜ்ரபாகு லேசாகப் புன்முறுவல் கொண்டு, ''எனக்கு இப்பொழுது பதவி மாற்றம் தர உத்தேசிக்கிறீர்களா?'' என்று வினவினான்.

சேனாதிபதி எதைக் குறிப்பிடுகிறான் என்பதை உணர்ந்து கொண்ட கௌதமிபுத்ரன், ''எந்தப் பதவியைக் குறிப்பிடுகிறாய் சேனாதிபதி?'' என்று விசாரித்தான் சற்றே ஏளனம் ஒலித்த குரலில்.

''புரோகிதர் பதவியை. முதலில் நீங்கள் பூஜாரியானீர்கள். அடுத்து என்னைப் புரோகிதனாக்கினீர்கள். இருவருமே புதுப் பதவிகளை வகிக்கலாம். மந்திர தந்திரங்களில் நீங்களும் எந்த விதத்திலும் குறைந்தவர்களாகத் தெரியவில்லை. தாபிலேசுவரருக்கு அபிஷேக ஆராதனைகளில் என்ன திறமையைக் காட்டினீர்கள்! நமது ராஜ்ய ஆஸ்தான குருகூட இத்தனை ஸ்பஷ்டமாக மந்திரங்களை ஓதியதை நான் கேட்டதில்லை'' என்றான் வஜ்ரபாகு லேசாக விஷமக் குரலில்.

''என்னை பூஜாரியாகச் சொல்கிறாயா?'' என்று வினவினான் சதகர்ணி.

''சேனாதிபதி புரோகிதனாகும்போது மன்னர் பூஜாரியாவதுதான் தகும். இருவருமே கத்தி கேடயங்களை விட்டு மணியை எடுத்துக்கொள்ளலாம்'' என்று சொன்னான் வஜ்ரபாகு.

''எந்த ஆயுதத்தின் உபயோகமும் யார் கையிலிருக்கிறதோ அவனைப் பொறுத்தது. சுவாமிக்கு மணியடிக்க உன் கையில் மணியைக் கொடுத்தால் நீ அதைக் காஷ்டானன் தலையில் அடிக்கிறாய்'' என்று கூறிக் குறுநகை கொண்டான் கௌதமிபுத்ரன்.

சேனாதிபதி பக்கத்திலிருந்த ஒரு மரக் கிளையை உடைத்து நடந்து கொண்டே, ''சுவாமிக்கு முதலில் மணியை அடித்துப் பார்த்தேன். பயனில்லை. காஷ்டானன் தலையில் அடித்தேன். உடனடியாகப் பயன் கிடைத்தது'' என்று கூறிய சேனாதிபதி ''மன்னவா! ஒரு சந்தேகம்'' என்று கேட்டான்.

''கேள் சேனாதிபதி'' என்று ஊக்கினான் கௌதமிபுத்ரன்.

சற்று சிந்தித்துவிட்டுக் கேட்டான் சேனாதிபதி ''சண்டி ஹோமம் செய்து பிசாசை ஓட்டி விட்டதாகவும் இரண்டாவது ஹோமத்திற்குப் பிறகு பயம் ஏதுமில்லையென்றும் பொய் சொல்லி ஓடிவிட்ட மக்களைத் திரும்ப அழைத்தது எப்படி நியாயம்?'' என்று.

''பிசாசு என்று பயமுறுத்தி மக்களை அவர்கள் குடிசைகளிலிருந்து விரட்டித் தனது படைகளை இந்த மலைப்பகுதியில் இறக்கித் தளம் அமைக்கத் திட்டம் செய்தான் மகாக்ஷத்ரபன். அதே பிசாசு தந்திரத்தை நானும் கையாண்டு மக்களுடைய திகிலை அகற்றி அவர்களை இங்கு குடியேறச் செய்தேன். இதில் தவறு ஏதுமில்லை. தந்திரத்தைத் தந்திரத்தால் அறுப்பதுதான் நியாயம்'' என்ற சதகர்ணி, ''தவிர பிசாசு இப்பொழுது நமது பக்கம் திரும்பிவிட்டது. மற்றவர்களை விட்டு இப்பொழுது என்னைப் பிடித்துக் கொண்டது'' என்றுசொல்லிச்சித்தரஞ்சனிதொடையில் கையை வைத்தான் சாதவாகனன்.

திருமண மாலையணிந்து மணப் பெண் கோலத்திலேயே புரவி மீது வந்து கொண்டிருந்த சித்தரஞ்சனி புன்முறுவல் காட்டினாள். தன் தொடை மீது வைத்த கையைத் தனது கையொன்றால் பற்றி நெறித்தாள் தனது கோபத்தைக் காட்ட. ஆனால் அதற்கு மசியாத கௌதமிபுத்ரன் கையைச் சற்று மேலும் நகர்த்த சித்தரஞ்சனி சற்று பொய்க் கோபம் காட்டி 'உம்' என்று எச்சரிக்கை ஒலி கிளப்பினாள்.

''பிசாசுக்கு கோபம் வருகிறது'' என்றான் சாதவாகனன் லேசாக நகைத்து.

''மகாராஜா!'' என்றான் சேனாதிபதி.

''என்ன சேனாதிபதி?''

''உங்களுக்கு அதிர்ஷ்டம் அதிகம்.''

**சாண்டில்யன்**




"எப்படி?"

"பிசாசு கிடைத்தாலும் அழகான பிசாசாகக் கிடைக்கிறது. நீங்கள் சொல்கிறபடி கேட்கிறது.. உங்களைத் திருமணம் செய்து கொள்கிறது. இந்த மாதிரி பிசாசு கிடைத்தால் எல்லோருமே பிசாசை திருமணம் செய்து கொள்வார்கள். அப்புறம் சாதாரணப் பெண்களுக்குத் திருமணம் ஆவது துர்லபமாகிவிடும்" என்று சேனாதிபதி கூற மூவருமே நகைத்தார்கள்.

அப்படிப் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் சண்டிகை குகைக்கு அருகில் வந்ததும் சித்தரஞ்சனி புரவியை விட்டு இறங்கினாள். எதிரே கொங்கணி வேதியர் பலர் காய்ந்த அரசுச் சுள்ளிகளைக் கொண்டு ஹோமம் செய்து கொண்டிருந்தார்கள். ஹோம குண்டத்தைச் சுற்றி ஆண்களும் பெண்களுமாக கிராமவாசிகள் ஏராளமாக நின்று கொண்டிருந்தார்கள். கௌதமிபுத்ரனைக் கண்டதும் அந்தக் கூட்டமே தலை வணங்கியதும் கௌதமிபுத்ரனும் அவர்களைத் தலைசாய்த்து வணங்கித் தனது அங்கியைக் களைந்து பழைய பட்டுத் துணியை இடுப்பில் கட்டிக் கொண்டு ஹோமாக்கினி முன்பு உட்கார்ந்தான்.

சித்தரஞ்சனியையும் உட்காரச் சொல்லி தான் மட்டும் ஹோமத்தில் ஈடுபட்டான். சிவந்த முகம் அக்னியில் ஜொலிக்க உட்கார்ந்திருந்த சித்தரஞ்சனியை மக்களெல்லோரும் பார்த்து அவள் அழகைக் கண்டு பிரமித்து பரஸ்பரம் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசியதையெல்லாம் காதில் வாங்கிக் கொண்டிருந்த கௌதமிபுத்ரன் ஹோமம் முடிந்ததும் எழுந்து மக்களை நோக்கினான், மௌனமாக பல விநாடிகள். பிறகு பேசினான், மெதுவாக, "பெருமக்களே! இன்றுடன் உங்களைப் பிடித்த பிசாசு ஓடி விட்டது. சண்டி ஹோமம் செய்யத் தீர்மானித்த மறுநாளுக்குப் பிறகு அதைக் காணோம். இனி வர நியாயமில்லை. ஆகவே நீங்கள் தைரியத்துடன் இருங்கள். மக்கள் சக்திக்கு முன்பு எந்த சக்தியும் பயன்படாது. ஆயுதம் பூண்ட எதிரி வீரர்கள் ஐம்பது பேர் உங்கள் சக்திக்கு முன்பு செயலற்று விட்டதை நீங்களே பார்த்தீர்கள். நான் சொன்னபடி நீங்கள் பெருக்கு விலகி மரக்கூட்டங்களில் மறைந்திருந்து வீசிய கற்கள் நல்ல போர்ப் பயிற்சியுள்ள ஐம்பது வீரர்களை விரட்டி விட்டதைக் கவனித்தீர்கள். அம்பும் கத்தியுந் தான் பயனளிக்கும் என்ற புரட்டை நீங்கள் இன்று நிரூபித்துவிட்டீர்கள். இனிமேல் அஞ்சாமல் எல்லோரும் உங்கள் இல்லம் திரும்புங்கள்" என்று கட்டளையிடும் தோரணையில் பேசினான்.

அவன் பேச்சைக் கேட்ட மக்களில் ஒரு வயோதிகன் "நீங்கள் சொல்வது சரி. கல்லையும் கட்டையையும் கொண்டு பெரும் போர் நடக்குமா?" என்று கேட்டான்.

அந்த வயோதிகனைக் கூர்ந்து நோக்கிய சதகர்ணி, "பெரியவரே! ராமாயணத்தில் பெரும் ராட்சதப் படை வானர வீரர்கள் ஏந்திய கற்களாலும் மரங்களாலுமே அழிந்தது. உவமையைத் தவறாக எடுத்துக்கொள்ள வேண்டாம். வானரர்களாக வந்தவர்கள் தேவர்கள். அந்த மகா வீரர்கள் தர்மத்தின் சக்தியை, கல்லையும் மரத்தையும் கொண்டு நிரூபித்தார்கள். அது நமக்கும் படிப்பினை. இந்த மலை, இதைச் சேர்ந்த கிராமங்கள் உங்களுக்குச் சொந்தம். அதிலிருந்து உங்களை மகாக்ஷத்ரபர் விரட்டியது அநியாயம். அவர் கையாண்ட முறையும் தர்மமான முறையல்ல. அதை எதிர்த்து நிற்போம்" என்று பதில் சொன்ன சதகர்ணி, "இந்த ஹோமப் பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டு இல்லம்

அரசியல்வாதி: "நான் பேசிய பொதுக் கூட்டத்துக்கு எட்டே எட்டுப் பேர் தான் வந்ததாப் பொய்ச் செய்தி போட்டிருக்கான் இந்தப் பேப்பர்க்காரன்!"

மனைவி: "என்ன சொல்றீங்க? நாலே நாலு பேர்தான் வந்திருந்தாங்கன்னு உண்மைச் செய்தியைப் போட்டிருக்கணுங்கிறீங்களா?"

—உ. ராஜாஜி.



செல்லுங்கள். உங்களை வரவழைக்க அவசியமிருந்தால்....." என்று கூறி, சேனாதிபதியைப் பார்த்தான்.

சேனாதிபதி தனது அங்கிப் பையிலிருந்து ஒரு சிறு வலம்புரி சங்கத்தை எடுத்துக் கிரீச் சென்று பலமாக ஊதினான். "இப்படி சங்கு ஊதப்படும். இதைக் கேட்டதும் விரைந்து வாருங்கள்" என்றான் சதகர்ணி.

"எதிரி இன்னும் அதிகப் படைகளைக் கொண்டு வந்தால்?" என்று மற்றொருவன் வினவினான் கூட்டத்திலிருந்து.

"இந்த ஹோமப்புகை அவர்களை கவனித்துக் கொள்ளும். மேற்கொண்டு எதையும் கேட்காதீர்கள்" என்று சொல்லிவிட்டு, "மாலையில் வந்து பிரசாதம் வாங்கிச் செல்லுங்கள்" என்றும் சொல்ல, கூட்டம் சிறிது சிறிதாகக் கலையத் தொடங்கியது. "சேனாதிபதி! நாம் போஜனத்தை முடித்துக் கொள்வோம்" என்றான் சதகர்ணி.

"ஏது சாப்பாடு?" சேனாதிபதி கேட்டான்.

"தாபிலேசுவரருக்குப் பிரசாதம் செய்து வைத்திருக்கிறேன். நம் மூவருக்கும் அது போதும்" என்றான் சதகர்ணி.

"மன்னவா! தங்களுக்குச் சமையலும் தெரியுமா?" என்று கேட்டான் சேனாதிபதி.

"முதல் தரமாகச் சமைப்பேன்."

"பூஜாரி உத்தியோகம் போனாலும் சமையல் உத்தியோகம் இருக்கிறது. மகாராஜா உங்களுக்குக் குறைவு ஏதுமில்லை."

இதைச் சொன்ன சேனாதிபதி நகைத்தான். சதகர்ணியும் ஹோம சாம்பலை திரட்டி வைக்கும்படியும் மாலையில் மக்களுக்கு விநியோகம் செய்யும்படியும் வேதியருக்குக் கூறிவிட்டு சித்தரஞ்சனியுடனும் சேனாதிபதியுடனும் தாபிலேசுவரர் கோவிலுக்கு வந்து சேர்ந்தான். பிரசாதத்தை மற்ற இருவருக்கும் கொடுத்து, தானும் உண்ட பின்பு தாபிலேசுவரர் சந்நிதியில் உட்கார்ந்த வண்ணம் தீர்க்க சிந்தனையில் இருந்தான்.

"என்ன யோசிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் சித்தரஞ்சனி.

"இன்றிரவு என்ன நடக்கும் என்பதைப் பற்றிச் சிந்திக்கிறேன்."

அவனைத் தவறாகப் புரிந்து கொண்ட சித்தரஞ்சனி புன்முறுவல் செய்தாள். குறிப்பறிந்த சேனாதிபதி மெதுவாக எழுந்து அப்புறம் சென்றான். சதகர்ணி சொன்னான், "சித்தரஞ்சனி! இன்றிரவு நீ நினைப்பது போல் இருக்காது. பெரும் ஆபத்தை நான் எதிர்பார்க்கிறேன்" என்று.

"என்ன அப்பேர்ப்பட்ட அபாயம்?" என்று கேட்டாள் சித்தரஞ்சனி.

"திட்டமாகச் சொல்ல முடியாது. மகா க்ஷத்ரபர் ஏமாறுபவர் அல்ல. இன்று ஏற்பட்ட தோல்வியையும் ஏற்று, கைகட்டி சும்மா உட்கார்ந்திருப்பவர் அல்ல" என்று கூறிய சதகர்ணி குரலில் கவலையைக் காட்டினான்.

இங்கு சதகர்ணி பேசிக் கொண்டிருந்த அதே சமயத்தில் சதகர்ணியை அழித்துவிட பயங்கரமான ஒரு திட்டத்தை வகுத்துக் கொண்டிருந்தான் நாகபாணன். தன் எதிரில் நின்று கொண்டிருந்த க்ஷத்ரபனையும் காஷ்டானனையும் நோக்கி, "இன்னும் ஒரு சந்தர்ப்பம் தருகிறேன் உங்களுக்குச் சாதவாகனனை அழிக்க. அதிலும் நீங்கள் தோல்வியடைந்தால் உங்களிருவரையும் இந்த அஞ்சன்வேல் கோட்டையின் சதுக்கத்தில் தூக்குப் போடுவேன். சுறுக்குக் கயிற்றை உங்கள் இருவர் கழுத்திலும் என் கையாலேயே மாட்டி இறுக்கி உங்கள் இருவர் விழி பிதுங்குவதைப் பார்ப்பேன்" என்று கூறிவிட்டு, "நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள்" என்று மிகவும் பயங்கரமான திட்டமொன்றை விவரிக்கலானான்.

திட்டத்தை விவரிக்கு முன்பு ஒரு கேள்வி கேட்டான். "க்ஷத்ரபா! சண்டி ஹோமத்திலிருந்து எழுந்த புகையைக் கண்டாயா?" என்று.

"கண்டேன். ஆகாய மளாவிப் போயிற்று. ஹோமம் நன்றாக நடந்திருக்க வேண்டும்" என்றான் க்ஷத்ரபன்.

"அது ஹோமப்புகையல்ல" என்றான் நாகபாணன்.

"வேறு எந்த புகை?" காஷ்டானன் கேட்டான்.

"நம்மை அழிக்க வந்த யமப்புகை" என்ற நாகபாணன் இகழ்ச்சி நிரம்பிய பார்வையை காஷ்டானன் மீது செலுத்தினான்.

(தொடரும்)



# ‘என் ஹேமா காத்திருக்கிறாள்’

சுபா

மறுநாள் கொட்டை எழுத்துக்களில் செய்தியாகிற அளவுக்கு வெயில். இஸ்திரி போட்ட சாலைகளில் இரண்டரை மணி நேரமாக அலைச்சல். கலைவாணி களைத்திருந்தாள். கம்பெனி கொடுத்த யூனிஃபார்ம் வெள்ளைப் புடவை, வியர்வை வயிற்றோடு ஒட்டிப் படிந்திருந்தது. விலக்கி, அதையே விசிறியாக்கினாள்.

இரண்டரை மணி நேரம் அலைந்தும் தோள் பையில் பாரம் குறைந்திருக்கவில்லை. பவுடர் டப்பாக்களும், சோப்புக் கிழங்குகளும் புதிதாய்த் துணிந்து வாங்குபவர்கள் வெகு சொற்பம்.

''இல்லம்மா, பாண்ட்ஸ் தவிர வேற பவுடர் போடறதில்லை, ஸாரி.''

''ஆண்ட்டிசெப்டிக் சோப்புன்னா? டெட்டால் மாதிரியா? அதான் ஏற்கனவே டெட்டால் இருக்குதே. அப்புறம் புதுசா என்னத்துக்கு இன்னொண்ணு வேண்டாம்மா கொழந்தை.''

''வெளியே நின்னுக்கிட்டே விக்க முடியுமா மேடம்? வீட்ல யாரும் பொம்பளைங்க இல்லியேன்னு பாக்கறீங்களா? இங்க நாலு பேரும் பிரம்மச்சாரிங்க. உள்ளே வாங்க. சோப்பை எப்படி உபயோகப்படுத்தணும், பவுடரை எங்கே போட்டுக்கணும்னு டெமான்ஸ்ட்ரேட் பண்ணிக் காட்டுங்க.... ஆளுக்கு ரெண்டு அயிட்டம் வாங்கிக்கறோம்.''

''யூ ராஸ்கல்ஸ்'' என்று அந்தக் கடைசி வீட்டில் ஆத்திரத்தோடு காறித்துப்பியது இப்போதும் தொண்டையில் எரிந்தது. பவுடர், சோப் விற்பவர் என்றாலே இடுக்கில் கை நுழைக்கும் இந்த முயற்சி இதோடு நான்காவது தடவை. இந்தமுள்ளம்பன்றிகளால், கௌரவமான ஆண்களின் வீட்டைத் தட்டக் கூட யோசனையாய் இருந்தது.

'பீய்க்' என்று ஊதிவிட்டு, ஸ்கூட்டர் ஒன்று அவசரமாய்க் கடந்தது. ஹெல்மெட் இளைஞன். அவன் முதுகில் ஸ்டிக்கர் ஒட்டியது போல் அந்தப் பெண். இளைஞனுக்கு முன்னால் நின்று கொண்டு ஹாண்டில் பாரைப் பிடித்திருந்த கவுன் போட்ட குழந்தை.

பாதுகாப்பான குழந்தை. என் ஹேமாவைப் போல் பக்கத்து வீட்டில் விட்டுப் போகும் அம்மா இல்லை. தரையில் குப்புறத்துக் கொள்ளக் கற்றுக் கொள்ளுவதற்குள் விட்டுப் போன அராஜக அப்பா இல்லை.

போட்டிருந்த ஹவாய்ச் செருப்பில் நிறைய விள்ளல்கள் இருக்க, தார் ரோடு சூடு போட்டது. குழந்தை ஹேமாவின் இரண்டு வயதுப் பசி

முகமும், அதற்குக் காரணமான அந்த விவேக்கின் ராட்சஸ முகமும் நினைவில் இடறின. எதிர் காம்பவுண்டில் நுழைந்தாள். வாட்ச்மேன் தடுத்தான்.

''என்னங்க செய்யறது, எங்க பொழப்பே நாய்ப் பொழைப்புத்தான்'' என்று ஆரம்பித்து, வெற்றியளித்த பழைய டயலாக்கை அவிழ்த்துவிட்டு, ஐந்து நிமிடங்களில் அவன் இரங்கி, ''சரி, ஆறு வேணுன்னு சொன்னு உடனே காலி பண்ணிடணும். மேல மேல பேசி அவங்களுக்கு எரிச்சல் கௌப்பாதே'' என்று அனுமதித்ததும் அழைப்பு மணிகளுக்காக விரலைத் துடைத்துக் கொண்டாள்.

இரண்டாவது மாடிக்கு வருமுன் மூன்று சோப்களும், இரண்டு பவுடரும் காசாகியிருந்தன. உயர உயரமான படிகளில் வளைந்து ஏறியதில் தலையில் மறுபடி அந்த கிர்ர், கண்களில் ஆரஞ்சு, சிவப்புச் சுழல்கள், சுவரைப் பிடித்துக் கொண்டாள்.

பிளாஸ்டிக் மாவிலைகளில் லக்ஷ்மி பெயிண்ட் உதிர்ந்திருக்க, அந்தத் தோரணம் கட்டிய கதவுக்கான மணியை அழுத்தினாள். உள்ளே மின்சாரம் சங்கீதமானது. கதவைத் திறந்த பெண் நீல நிறத்தில் புடவை உடுத்தியிருப்பதை விழிகள் கிரகித்தபோது, அத்தனை நேரம் விளையாட்டுக் காட்டிய கடல் அசதி அவள் உடம்பில் புயல் தாக்கியது. அப்படியே மயங்கி, திறந்த கதவு வழியே உள்ளே விழுந்தாள்.

சோஃபாவில் யார் உட்கார்த்தினார்கள்?

கலைவாணியின் பார்வை ஃபோகஸிற்கு வந்ததும் அவள் தென்பட்டாள். நீலப்புடவை. ரவி வர்மாவின் சரஸ்வதியைப் போல் பரந்த கூந்தல். வசதியான உயரம். ஆண்களை வாலை ஆட்டச் சொல்லும் வளைவுகள். க்ரீம் விளம்பர முகம், கழுத்து. அதில் குறத்தியிடம் வாங்காத மணிமாலை. ரோஸ் உதடுகள். வரிசை தப்பாத அநாவசிய இடைவெளியில்லாத ஆரோக்கியப் பற்கள்.

அந்தப் பற்கள் புன்னகைத்தன.

''ரொம்ப அலைச்சலா?'' குரல் பாட்டுடம்போடு ஒட்டாமல் சற்று கரகரப்பாய்.

''ஸாரி, உங்களுக்கு வீண் சிரமம்'' என்றாள் கலைவாணி, வெட்கிய முதுகை நிமிர்த்த முயற்சி செய்து கொண்டு.

''நீங்க விழுந்தப்ப இதெல்லாம் பையை விட்டு எகிறிட்டது. சரியா இருக்கா பார்த்துக்குங்க'' என்றாள் டீப்பாயில் அடுக்கிய பவுடர், சோப்களைக் காண்பித்து.

கலைவாணி சரிபார்த்தாள். ''ரொம்ப நன்றிங்க'' என்று எழுந்தாள்.

''இன்னும் கொஞ்ச நேரம் உக்காருங்க. ரெஸ்ட் எடுத்திட்டுப் போகலாம்.''

''பரவால்லீங்க.... நான் சாயந்தரத்துக்குள்ள இத்தனையும் வித்தாகணும்.''

''புதுக் கம்பெனி போலருக்கு.''

''ஆமா. துணிக்குப் போடற சோப் தயாரிச்சிட்டிருந்தாங்க. இப்ப மத்த அயிட்டம்ஸ் ஸாம்பூ பண்றாங்க.''

''கஷ்டமான வேலை இல்லே?''

''வயித்துப் பாட்டுக்கு கஷ்டம் பார்த்தா முடியுங்களா?''

அப்புறம் நீலப்புடவை கொஞ்ச நேரத்திற்கு மௌனமாயிருந்தாள். எழுந்து உள்ளே போய்க் கண்ணாடித் தம்ளரில் ஆரஞ்சு ஜூஸ் கொண்டு வந்தாள்.

''இதெல்லாம் எதுக்குங்க?''

''பரவால்லே. சாப்பிடுங்க. ரொம்ப வெயில்ல அலைஞ்சிருக்கீங்க....''

தாகம், வெட்கத்தை மற என்றது.

''கல்யாணமாய்டிச்சா உங்களுக்கு?''

கலைவாணி அவசரமாய்க் கழுத்துத் தாலியை ரவிக்கைக்குள் செருகி மறைத்தாள். கசப்பாய்ப் புன்னகைத்தாள்.

''ஆய்டிச்சு. ஆனா தாலியை பிளவுஸுக்குள்ள நீட்டா மறைச்சிடணும்னு கம்பெனி ஏஜெண்ட் சொல்லிட்டாரு. கல்யாணமானவங்களுக்கு வியாபாரம் ஜாஸ்தி ஆவாதாம்.''

''அவரும் அதே கம்பெனியா?''

''எவரு?''

''உங்க புருஷன்...''

கலைவாணி குனிந்தாள். ஜன்னலோரம் உட்கார்ந்து பயணிக்கையில் திடீரென்று கண்ணில் வந்து மோதும் பூச்சியைப் போல அநாவசியமாய் விவேக்கின் நினைவுகளைக் கிளறும் கேள்வி.

இவளிடம் என்ன சொல்வது?

ஊர் தாண்டி வந்து திருச்சியில் கல்யாணம் செய்து, சென்னைக்கு அழைத்துவந்து நான்கே மாதங்களில் காணாமல் போன விவேக்கைப் பற்றி இவளிடம் பிரஸ்தாபிப்பது எதற்கு? அநாதரவாய் வயிற்றில் சுமையோடு அப்பா வீட்டிற்குப் போனதும், அந்த ஒட்டைப் பட



கில் அதற்கு மேல் இடமில்லை என்று வாய் விட்டுச் சொல்ல முடியாமல் கொஞ்ச நாள் தத்தளித்துவிட்டு அவர் கண்ணை மூடியபோது மறுபடியும் சென்னையிலேயே வந்து விழுந்ததை இவனிடம் சொல்வதா? விவேக்கை அவன் ஆஃபீஸ் அட்ரஸில் பிடித்து, வலுக் கட்டாயமாய் தன்னைத் திணித்துக் கொண்டது இவளுக்கு முக்கியமா? உப்புத் தாளை வைத்து கண்ணில் உரசாத குறையாய் அவன் வார்த்தைகளால் காயப்படுத்திய நாட்களையும், கிடைத்த ஆயுதங்களால் காயப்படுத்திய இரவுகளையும் இவள் புரிந்து கொள்வாளா? கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரியில் ஹேமா பிறந்து, வீடு திரும்பிய நான்காவது மாதமே விவேக் மறுபடியும் காணாமல் போனதும், அவன் கம்பெனி வேலையை உதறியிருந்ததற்கு மேல் விவரம் ஏதும் இல்லாமல் மறுபடியும் அவள் இருள் காட்டில் தத்தளித்ததும் இன்று வரை அவனுடைய முகமோ, முகவரியோ தென்படாமல் அவள் களைத்திருப்பதும் இந்தப் பெண்ணுக்கு அவசியம் சொல்ல வேண்டுமா?

''கேக்கக் கூடாத கேள்வி கேட்டுட்டேனா?''

''எல்லாருக்கும் உங்களை மாதிரி வாழ்க்கை நல்லா அமையறதில்லீங்க'' என்றாள் கலைவாணி, மிருதுவான குரலில். ''ஒரு பொண்ணுக்குக் கல்யாணமாயிட்டதால மட்டும் எல்லாம் கெடைச்சிடறதில்ல. எனக்கு கழுத்தில தாலி இருக்கு. வயித்தில பொறந்த கொழந்தை இருக்கு. ஆனா எனக்குச் சொல்லிக்க புருஷனா, என் குழந்தைக்கு அப்பனா இல்லே.''

எதிரே இருந்தவள் நேரே முகத்தில் அறையப்பட்டவள் மாதிரி பிரமையோடு பார்த்தாள். அவள் கண்களில் சோகம் மிதந்தது. மூக்கை உறிஞ்சினாள். கன்னங்களில், அடக்கிய அழுகை சிவப்பேறியது.

''நீங்க சொன்னது வாஸ்தவந்தான்'' என்றாள், குரலைச் செருமிக் கொண்டு. ''எல்லாம் கெடைச்சிட்டதுன்னு சந்தோஷப்பட்டுட்டிருக்கறப்ப, கண்ணெதிரே அப்படியே அதை அள்ளிக்கிட்டுப் போயிட்ட அனுபவம் எனக்கும் இருக்கு. உங்க கதை எனக்குப் பூரணமாத் தெரியாது. ஆனா அதில ஏதோ ஒண்ணு என் வாழ்க்கைல நடந்த சில விஷயங்களைக் கிளறி விடுது. புரியுதோ புரியலையோ உங்க நிலைமையைச் சொல்லி அழறதுக்கு ஒரு கொழந்தை இருக்கு. எனக்கு பெத்தவங்களும் இல்லே, குழந்தையும் இல்லே. இருந்த ஒரே உறவு, என் புருஷன், அவரையும் நாப்பது நாளைக்கு முன்னால தான் பறி கொடுத்தேன்.''

கலைவாணி அதிர்ச்சியோடு அவளைப் பார்த்தாள். இத்தனை இளம் வயதிலா?

''பேர் என்னவோ சாவித்திரின்னு வச்சிட்டாங்க. ஆனா எமனோட போராடி அவரைக் காப்பாத்தற பலம் எனக்கு இல்லே.'' சாவித்திரியின் குரல் தேய்ந்தது.

''என்னை மன்னிச்சிடுங்க'' என்றாள் கலைவாணி. ''ஆண்டவன் உங்களுக்கு இவ்வளவு பெரிய தண்டனையைக் கொடுத்திருக்க வேண்டாம்.''

சாவித்திரி சடாரென்று நிமிர்ந்தாள். ''சரியாச் சொன்னீங்க. தண்டனை..... அதுதான் கரெக்ட் வார்த்தை. நான் செஞ்ச தப்புக்கு நியாயமாத்தான் கெடைச்சிருக்கு...''

சாவித்திரி நகங்களில் பூசிய பாலிஷை ஆராய்ந்தாள். கொஞ்சம் தயங்கிவிட்டுப் பேசினாள். ''இன்னொருபொண்ணோட வாழ்க்கையை நான் பாழுடிச்சேன். அதுக்கு இப்ப அனுபவிக்கிறேன். உங்ககிட்டே மனசை விட்டுச் சொல்றேனே.

''நாப்பது நாளைக்கு முன்னால இறந்து போனார்னு சொன்னேனே அவர் எனக்கு தாலி கட்டின புருஷனில்ல. தாலி, சடங்கு, கல்யாணம் இந்த வார்த்தைங்களுக்கு அர்த்தம் கண்டு பிடிச்சுக்கிட்டு நேரத்தை வீணாக்கறதைவிட அவரோட சேர்ந்து வாழணுங்கற வெறிதான் அப்ப பெரிசா இருந்தது. இத்தனைக்கும் அவர் கல்யாணமானவர்னு தெரியும். அவ்வளவா அழகோ, படிப்போ, புத்திசாலித்தனமோ இல்லாத பெண்டாட்டியா வந்து சேர்ந்திட்டா ஒருத்தி. அவளோட வாழறதிலே ஒரு திருப்தி இல்லாம இருந்தப்ப என்னைப் பார்த்தாரு. என் அழகு அவருக்குப் பிடிச்சுப் போச்சு. என் பேச்சு, என் டிரஸ், என் ஐடியாஸ் எல்லாமே அவருக்கு ஏத்த மாதிரி இருந்தது. அநாவசிய விவகாரங்கள்ல மாட்டாம சேர்ந்து வாழறதுன்னு முடிவு செஞ்சோம். ரெண்டு வருஷமா இதோ, இதே வீட்ல ஒரே பாயில படுத்து, ஒரே மூச்சுக் காத்தைத்தான் சுவாசிக்கிட்டிருந்தோம். திடீர்னு ஒருநாள் ஸ்விஷ்ஷ்—எல்லாம் மின்னல் மாதிரி போயிடிச்சி.''

சிலோ இறங்கி ஏறி—இப்போது கலைவாணி





## அருள்வாக்கு

தூய்மைக் குறைவுக்கெல்லாம் காரணமானது சிற்றின்பம் என்று மகான்களெல்லாம் பாடி வைத்திருந்தாலும், அதிலும்கூட ஒரு நெறியை ஏற்படுத்திக் கொடுத்து, அதையே ஆத்மாவை தூய்மைப் படுத்துகிற ஒரு ஸம்ஸ்காரமாக்கி நமக்கு வேத 'தர்ம சாஸ்திரங்கள் கொடுத்திருக்கின்றன. சாதாரணமாக ஒரு ஜீவனைக் ''காட்டுக்குப் போ; ஸந்நியாசியாய் இரு'' என்று சொன்னால் அவனால் முடியாது. லோக வாழ்க்கையில் அடிபட்டுத்தான் அவனுக்குப் பக்குவம் உண்டாக வேண்டும். பிஞ்சாகக் கசக்கிற காலத்தில் கசந்து, வடுவாகத் துவர்க்கிற காலத்தில் துவர்த்து, காயாகப் புளிக்கிற காலத்தில் புளித்து, அப்புறம்தான் பழமாகப் பழுத்து மதுர பூர்ணமாவதற்கு சாமானிய ஜீவர்களால் முடியும். தானாகப் பழுக்காததைத் தடி கொண்டு அடித்துப் பழுக்கப் பண்ண முடியாது. அப்படி இயற்கை வேகத்தை மீறிப் பண்ணினால் ராமலிங்க ஸ்வாமிகள் சொன்னபடி ''வெம்பி விழ'' வேண்டியதுதான் என்பது ரிஷிகளுக்குத் தெரியும். அதனால்தான் விவாஹத்தையும் கிருஹஸ்த (இல்லற) தர்மங்களையும் வைத்திருக்கிறார்கள். அது மட்டுமல்லாமல் பூர்வ கர்மாவுக்காக அநேக ஜீவர்கள் பிறந்தாக வேண்டுமே? தாம்பத்யம் இல்லாமல் இது எப்படி முடியும்?

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

யின் முறை. சாவித்திரியை அனுதாபத்தோடு பார்த்தாள். சாவித்திரி நகங்களை ஆராய்ந்து விட்டு மறுபடியும் ஆரம்பித்தாள்.

''தாலியாவது கல்யாணமாவதுன்னு நான் துச்சமா நெனைச்சதென்னவோ உண்மை தான். ஆனா இப்பத்தான் தெரியுது அதுக்கும் எவ்வளவு அழுத்தம் இருக்குன்னு. அவர் இறந்தவுடனே அவருக்குச் சேர வேண்டிய பி.எஃப், கிராஜுவிட்டி எல்லாம் அவரோட மொதல் சம்சாரத்துக்குப் போகணும்னு தீர்மானமாயிடிச்சி. ஆனா அவங்க எங்கே இருக்காங்க, என்ன செய்றாங்க ஒண்ணும் கண்டு பிடிக்க முடியலே. அவங்களை எப்படியாவது லொகேட் பண்ணி அவங்களுக்குச் சேர வேண்டியதைச் சேர்த்திட்டா தான் என் மனசு நிம்மதியாகும்.''

கலைவாணிக்கு எங்கோ ஒரு இழை அறுபடுவது போலிருந்தது. அவிழ்த்துவிட்ட காற்றாடி, அலைந்துவிட்டு ஏதோ ஒரு மரத்துக் கிளையில் சிக்கி நிற்பது போலிருந்தது.

''நம்பறதுக்குக் கஷ்டமாயிருக்கும். ஆனா நான் ஏற்கனவே அந்தப் பொண்ணைப் பத்திச் சில விவரங்கள்லாம் சேகரிச்சிட்டேன்'' என்றாள் சாவித்திரி. ''இப்ப மெட்ராஸ்ல தான் எங்கேயோ இருக்கரு. பேரு கலைவாணி. ரெண்டு வயசில ஒரு பொண் கொழந்தை கூட இருக்கு. இவ்வளவு கண்டு பிடிச்சவ, அவ எடத்தைக் கண்டு பிடிக்க ரொம்ப நாள் ஆகாதுன்ற நம்பிக்கைல இருக்கேன்.''

மழை நீரை நேரே வாங்கிக் கொள்ளுமாமே, சக்ரவாகப் பட்சி. அதுபோல் அந்த வார்த்தைகளை ஒவ்வொன்றாய் வாங்கிக் கொண்டாள் கலைவாணி. கண்களை எதிர்பார்ப்போடு சுழற்றி அறையை ஆராய்ந்தாள். அவள் தேடியது கண்ணாடி போட்ட அலமாரிக்குள் இருந்தது.

விவேக்கும் சாவித்திரியும் எடுத்துக் கொண்ட ஃபோட்டோ.

''நான் ஒண்ணு கேக்கலாமா?'' என்றாள் சாவித்திரியிடம். ''உயிரோட இருக்கறச்சே கொடுக்க வேண்டியதெல்லாம் மறுத்திட்டு செத்தப்புறம் உனக்குத்தான் இதெல்லாம் சொந்தம்னு லட்ச ரூபா கொண்டு வந்து கொடுத்தாலும் எந்தப் பொண்ணுக்கு அதை வாங்கறதுக்கு மனசு வரும்?''

''உயிரோட இருக்கறப்ப கொடுக்க இஷ்டமில்லை. இப்ப அவசியம் வந்திருக்கு. வாங்கிக்கிட்டா என்ன தப்பு?''

''தப்பா ரைட்டான்னு அந்தப் பொண்ணு தான் முடிவு செய்யணும்....'' கலைவாணி தன் பையை எடுத்து எல்லாவற்றையும் அடைத்துக் கொண்டாள்.

''அப்ப நான் கௌம்பறேங்க. எனக்குச் செஞ்ச ஹெல்ப்புக்கு ரொம்ப தாங்க்ஸ்.''

'சாவித்திரி அவளை ஏக்கத்தோடு பார்த்தாள். ''என் மனசுல இருந்ததையெல்லாம் உங்க மடில ஏத்திட்டேன். கடைசில ஒண்ணும் வாங்காம அனுப்பினா எப்படி? ரெண்டு பவ்டர் பாக்ஸும், ரெண்டு சோப்பும் கொடுங்க. எவ்வளவு ஆச்சு?''

-கலைவாணி விற்பனையை முடித்துக் கொண்டு கிளம்பினாள்.

''உங்க பேரைச் சொல்லவேயில்லையே?'' என்றாள் சாவித்திரி, வாசல் கதவைத் தாளிடும் நேரம். ''வீடு எங்கே?''

''காயத்ரி'' என்றாள் கலைவாணி. ''செங்கல்பட்ல இருக்கேன். வரட்டா?''

இப்பொழுது சாலையில் நடந்தபோது, அறுந்த செருப்பு வழியே வெயில் சுடவில்லை. தோள் பையின் பாரம் இழுக்கவில்லை. காலையில் இருந்த சோகத்தின் சுமையில்லை. மாறாக ஒரு சாதனையின் சுகம் இருந்தது.

ஹேமா காத்திருப்பாள்.

இன்னும் நிறைய இடங்களுக்குப் போக வேண்டும்.

கலைவாணியின் நடையில் வேகம் கூடியிருந்தது.

# The only thing Priya can do with her eyes.... is cry.

சூரியோதயத்தையோ, அம்மாவின் புன்னகையையோ, ஏன், தன் சொந்த முகத்தையோ கூடப் பார்த்த ஞாபகம் இல்லை ப்ரியாவுக்கு. இப்பொழுது அவளுக்கு வாழ்க்கையில் ஒரே நிறம்தான் தெரியும் — கறுப்பு!

ப்ரியா பார்வை இழந்து பத்து வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. அவள் வளர வளர தன் இயலாமையையும், இயற்கை தனக்கு இழைத்த அநியாயத்தையும் உணர ஆரம்பித்தாள். அவளால் மற்ற குழந்தைகளுடன் சாதாரண பள்ளிக்குச் செல்ல முடியவில்லை. பிற சிறுவர்களைப் போல விளையாட முடியவில்லை; படிக்க முடியவில்லை. பூக்கள் மலர்வதை அவளால் பார்க்க முடியவில்லை. அவளுடைய உடையின் வண்ணங்களையோ, தோழர்களின் கண்களில் தோன்றிய சந்தோஷச் சிரிப்பையோ அவளால் பார்த்து மகிழ முடியவில்லை.

இப்போது அவளால் அழத்தான் முடிகிறது. அவளுடைய ஒவ்வொரு துளிக் கண்ணீரும் அவள் வாழ்க்கையின் சோகத்தை, அச்சத்தை..... தனிமையைப் பிரதிபலிக்கிறது. .

ஆனால் ப்ரியா நம்பிக்கை இழக்க வேண்டிய அவசியம் கிடையாது. பல பார்வையற்றவர்களைப் போல் அவளுக்கும் கண் பார்வை கிடைத்துவிட வாய்ப்புகள் உண்டு. ஒரு எளிமையான சிறந்த நிவாரணம் இருக்கிறது. அதற்குச் செலவே கிடையாது—உங்கள் நல்லெண்ணம் மட்டும்தான் தேவை.

ஓர் எளிய கார்னியா டிரான்ஸ்பிளான்ட் அறுவைச் சிகிச்சை ப்ரியாவுக்குப் பார்வையை வரவழைத்துவிடும். உபயோகமற்ற அவளுடைய கார்னியாவிற்குப் பதில் ஒரு ஆரோக்கியமான கார்னியாவைப் பொருத்த வேண்டும். அந்த ஆரோக்கியமான கார்னியா உங்களுடையதாக இருக்கலாம்.

கண்ணை நீக்குவதால் உடலில் வடுவோ, அலங்கோலமோ ஏற்படுவதில்லை. உங்கள் கண்களைத் தானம் செய்ய தீர்மானித்துவிட்டீர்களானால், 'அவை உங்களுக்குப் பிறகும் வாழ்ந்து ஒருவருக்குப் பயன் அளிக்கும்' என்ற சந்தோஷமான நினைப்புடன் நீங்கள் வாழலாம்.

நீங்கள் உயிரோடு இருக்கும்போது பார்வை இல்லாதவர்களுக்காக அனுதாபப் பட்டால், உங்கள் மரணத்துக்குப்பின் உங்கள் கண்களை அவர்களுக்கு வழங்கிவிடத் தீர்மானியுங்கள். அவர்களுக்கு நீங்கள் தரக்கூடிய பொக்கிஷம் போன்ற பரிசு அதுதான்.

இன்று இந்தியாவிலுள்ள சுமார் 90 லட்சம் பார்வையற்றவர்களுள் 22 லட்சத்திற்கு மேற்பட்டவர்கள் கண் தானம் பெறுவதால் பார்வையையும் பெறக் கூடியவர்கள். இவர்களுக்கு நீங்கள் உதவ நினைத்தால் கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளலாம்:



**NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD.)**

(Eye Donation Information Centre)

1-57, North Mada Street, Po. Tirumala Hills-517504.

**Via-Tirupati**

6

# சொர்க்கத்தின் கதவுகள்

அடுத்த சில தினங்களில் விமலா நன்றாகவே எழுந்து உட்கார்ந்து விட்டிருந்தாள்.

தொடர்ந்து டிரிப் கொடுப்பது நிறுத்தப்பட்டுவிட்டிருந்தது. நாளைக்கு இரண்டு தடவை என்று கொடுத்த ஊசி மருந்தும் நிறுத்தப்பட்டுவிட்டிருந்தது. குளுகோஸ் தண்ணீர்—மோர் என்று நீர் ஆகாரத்திலிருந்து இட்டிலி, தோசை சாப்பிட அனுமதிக்கப்பட்டிருந்தாள்.

தலையைத்தானே வாரி முடித்துக்கொண்டு எழுந்து கழிவறைக்கு போய்விட்டு வருமளவு உடம்பில் தெம்பு கூடிவிட்டிருந்தது. இன்னும் எதற்காகத் தொடர்ந்து அவளை மருத்துவமனையில் கட்டிப் போட்டு வைத்திருக்கிறார்கள்? அவரது கேள்விக்குப் பதிலே கிடைக்கவில்லை. அவருக்குள் எரிச்சல் மண்டிக்கொண்டு வந்தது.

பெரிய மருத்துவமனையில் இடம் கிடைப்பது எத்தனை அரிதோ அதைவிட இரட்டிப்பு சிரமம் அங்கிருந்து விடுதலையாகி வெளி வருவது போலும். எண்ணிக் குமைந்தார் சுவாமிநாதன்.

அறைக்குள்ளே நன்றாக நடமாடிய தம் மனைவியை ஏன் இன்னமும் வீட்டுக்கு அனுப்ப யோசிக்கிறார்கள்?

ஏன் இன்னமும் தொடர்ந்து ரத்தப் பரீட்சைகள் நடக்கின்றன? ஏன் இன்னமும் ஸ்பெஷலிஸ்ட் வந்து போகிறார்?

ஒரு தடவை அவர் வந்து நோயாளியை எட்டிப் பார்த்து, ''ஹலோ!'' என்றால்கூட நூறு ரூபாய் பில் விழுந்து விடுமாமே.

''ஐயோ! இதென்ன அநியாயம்?'' அவர் மனம் உள்ளே அலறிக் கொண்டிருந்தது.

அன்று மாலை அவரால் உணர்வுகளின் அழுத்தத்தைத் தாங்க முடியவில்லை. டாக்டர் மோகன் அறைக்குள்ளே வந்தபோதே சொல்லிவிட்டார்.

''நாளைக்கு நாள் நன்றாக இருக்கு. விமலாவை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போக விரும்புகிறேன்.''

''இன்னும் சில பரிசோதனைகள் இருக்கு. அதுக்குள்ளே போவது தப்பு!''



''என்ன பரிசோதனை? அவைகளை எதற்காகச் செய்து பார்க்கணும்?''

''எல்லாத்தையும் செய்து பார்க்கிறது நல்லதுன்னு சீஃப் அபிப்ராயப்பட்டார்!''

''என் கையிருப்பு, அவைகளுக்கு இடம் கொடுக்காவிட்டால்?''

அன்றைய தினம் அவர் செய்த உபதேசத்தின் பலன் போலும். மோகன் முற்றிலும் மாறியவனாகக் காணப்பட்டான். முன் போல இடக்காகப் பதிலளிக்கவில்லை.

''சீஃப்கிட்டே சொல்லி நாளைக்கே டிஸ்சார்ஜ் வாங்கித்தர முயற்சி செய்கிறேன்!''

''அந்தக் காரியத்தை நீ முதலில் செய். உனக்கு ரொம்ப புண்ணியம் கிடைக்கும்!''

''கவலைப்படாதீங்க. நான் பெரியவரிடம்




பேசறேன்'' என்று அவன் இதமாகக் கூறி விட்டுப் போய்விட்டான்.

இருட்டத் தொடங்கிய போதுதான்—விளக்குகள் வீதியிலும், மருத்துவமனையிலும் பளிச்சிட்ட பின்னர்தான் பெரியவர் தமது ரவுண்டுக்கு வந்தார்.

விமலாவைப் பரிசோதித்துவிட்டு அவரிடம் வந்தார்.

''நாளைக்கு உங்க மனைவியை வீட்டுக்கு அழைச்சிட்டுப் போகணும்னு சொன்னீர்களாமே?''

''என் மனைவிக்கு ஆஸ்பத்திரி வாசம் அலுத்துப் போச்சு!''

''அவங்களுக்கு அலுத்துப் போச்சா—உங்களுக்கு அலுத்துப் போச்சா?'' மிடுக்கோடு சுவாமிநாதனை உற்றுப் பார்த்தார்.

மௌனமாக நின்றார் சுவாமிநாதன்.

''சரி நாளைக்குக் காலை பத்து மணிக்கு டிஸ்சார்ஜ் கொடுக்கச் சொல்றேன். மருந்துகள் எழுதித் தருகிறேன். தொடர்ந்து சாப்பிடச் சொல்லுங்கோ. மறுபடி இந்த தொந்

திரவு வந்தால் தாமதம் செய்யாமல் உடனே மருத்துவமனைக்கு வந்துவிட வேணும்'' அதட்டலாகக் கூறிவிட்டு அவர் வெளியேறினார்.

'அப்பாடா' என்று நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார் சுவாமிநாதன். வீட்டுக்கார அம்மாள் தயாரித்துத்தந்தவிஜிட்பின்சூப்பை டிபன் பாத்திரத்தில் மூடி எடுத்துக் கொண்டு வந்து மேஜையின் மேல் வைத்தார்.

''நீங்க ஏதாவது சாப்பிட்டுட்டு வாங்க, இன்னிக்கு ஒரு நாள் பொழுது. நாளைக்கு நான் வீட்டுக்கு வந்ததும் நிம்மதியா இருப்பேன்'' விமலா மெல்லச் சிரித்தாள்.

தன்னைத்தானே அவள் கவனித்துக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கையில் விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தார். காலையில் ஒரு தம்ளர் காப்பியுடன் நாள் முழுவதும் அலைந்து திரிந்த களைப்பு ஒருபுறமும், பசி ஒருபுறமும் அவரை வருத்திக் கொண்டிருந்தது.

இனி வீட்டிற்குப் போய் அடுப்பு மூட்டி குக்கரை ஏற்ற அவருக்குத் தெம்பில்லை.

சுயம்பாகம் நாக்கைச் சாகடித்துவிட்டிருந்தது.

அருகிலிருந்த பஸ் நிலையத்தை அடைந்து பஸ் பிடித்து நெடுஞ்சாலையின் கடைசித் திருப்பத்தில் இறங்கினார் சுவாமிநாதன். அதற்குள் நன்றாக இருட்டிவிட்டது.

சாலையினின்று உள்ளே ஓடிய அந்த சந்திலிருந்த ஹோட்டல் வந்தனவை நோக்கி நடந்தார்.

குறுகிய அந்த சந்தில் அழுக்குப் பிடித்த சூழ்நிலையில் பழைய கட்டடத்தின் ஒரு பகுதியில் நடத்தப்பட்ட ஹோட்டல் வந்தனவை ஆதரித்தவர்கள் ஒரு சிலர்தான்.

உயர்மட்டத்துவாசிகள் திரும்பிப் பார்க்க விரும்பாத இடம். ஆனாலும் அங்கு தயாரிக்கப்படும் ஸ்பெஷல் பரோட்டாவும் சப்ஜியும் பற்றி அவருக்கு நன்றாகவே தெரியும்.

அழுக்குப் பிடித்த சூழ்நிலையையும் பழைய கட்டடத்தையும் பார்த்துக் கணக்குப் போடுகிறவர்களின் கூட்டம் இல்லாது, நிம்மதியாக ஒரு மேஜையருகே அமர்ந்து கற்பனையில் மூழ்கி வெகு நேரம் உட்கார்ந்து மெதுவாகச் சாப்பிடலாம் என்பது அவரது அனுபவம்.

ஹோட்டலுக்குள் நுழைந்தார். சாப்பாட்டறைக்குள் செல்லுமுன்பே பின் கட்டிலிருந்த சமைக்கும் இடத்திலிருந்து பரோட்டா தயாரிக்கப்படும் மணம் மூக்கில் மோதியது. வாய் ஊறிப் போனார்.

ஒரு தடவை அவர் தம் தம்பி மகன் அஸ்வத்துடன் அங்கே வந்திருந்தார்.

''வேலை கிடைச்சிட்டது. நீ ஊருக்குப் போகப் போறே. உனக்கு நான் ட்ரீட் கொடுக்கிறேன்'' என்று சொல்லி அவனை அழைத்துக் கொண்டு வந்திருந்தார்.

ஹோட்டல் வாசலின் முன் நின்ற குப்பைத் தொட்டியையும் உள்ளே கிடந்த ஆடிப்போன நாற்காலிகளையும், அழுக்குப் பிடித்த சுவர்களையும் பார்த்து அதிர்ந்து போய் முகத்தைச் சுளித்தான் அஸ்வத்.

''என்ன சித்தப்பா, இந்த ஹோட்டலுக்கு....'' என்று இழுத்தான்.

''கைய அலம்பிண்டு வந்து உட்கார். வாஷ் பேசின் எதிரே தெரிகிற சமையற்கட்டைப் பார்க்காதே. பார்த்தாச் சாப்பிடப் பிடிக்காது'' என்று சிரித்தார்.

''ஊரிலே எத்தனையோ பெரிய ஹோட்டல் இருக்கிறப்போ இதுக்கு நாம் ஏன் வரணும்?'' முணுமுணுத்தான் அஸ்வத்.

''சூடா பரோட்டாவும், கொதிக்கிற காப்பியும் கொண்டு வந்து வைப்பான். அது களைச் சாப்பிட்டா வியாதி ஒண்ணும் வராது. ஒரு தடவை இந்த ஹோட்டலின் பரோட்டாவை ருசித்துப் பார்'' சவால் விட்டார்.

அதற்குப் பின் அவன் அவருடன் இரண்டு தடவை அங்கு வந்து போனான்.

''சப்ஜி ரொம்ப ஜோர்'' என்று புகழ்ந்தான்.

அவர் அங்கே வந்து பல நாட்களாகிவிட்டிருந்தன.

இருட்டிச் சிறிது நேரமாகிவிட்டிருந்தது. உள்ளே விளக்குகள் அழுது வடிந்து கொண்டிருந்தன. ஒரு மூலையில் சுவரோரமாக அடக்கமாகக் கிடந்ததொரு நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

''ஒரு பிளேட் பரோட்டா—சப்ஜி. ஒரு கப் காப்பி'' என்று பையனிடம் சொல்லிவிட்டு அமர்ந்தார் சுவாமிநாதன். லேசாகச் சிறு ஓசையுடன் மேலே மின் விசிறிகள் சுழன்று கொண்டிருந்த போதிலும், கொசுக்களின் தொல்லை எப்பொழுதும் போலவே தான் இருந்தது. அது சமயம் ஹோட்டலில் கூட்டம் அதிகமிருக்கவில்லை. கொஞ்ச நேரத்திற்குப் பின்னர்தான் அவரைப் போன்று உணவு ரசனைக்காக அங்கு வருகிறதொரு கும்பல் அங்கே கூடும்.

பையன் கொண்டு வந்து வைத்த பரோட்டாத் தட்டை அருகில் நகர்த்திக் கொண்டு வேகமாகப் பிட்டு சப்ஜியில் தோய்த்து விழுங்கத் தொடங்கினார்.

சாப்பிடுவதற்குள் அவருக்கு விக்கல் வந்து விட்டது.



ஆசிரியர்: ''T. சங்கர்! உன்னோட இனிஷியல் ''T''னு போட்டிருக்கியே! உங்க அப்பா பேரென்ன?''

மாணவன்: '''Test Tube' சார்...!''

— அண்ணா அன்பழகன்.

பைத்தியம் 1: மெட்ராஸ்ல வெயில் ரொம்ப ஜாஸ்தியாம்...
பைத்தியம் 2: அப்படியா ....?
பைத்தியம் 1; ஆமான்டா, 'டைப் ரைட்டிங்' மிஷின்ல 'ஐஸ்'னு அடிச்சா பேப்பர்ல விழவே மாட்டேங்குதாம்.. உருகிப் போயிடுத்தாம்...

— அண்ணா அன்பழகன்.



கைவிரலை உள்ளே இட்டுக் கொண்டு பையன் தூக்கி வந்த தண்ணீர் டம்ளரின் அழுக்கு அவருக்குப் பிடிக்கவில்லைதான். ஆனால் விக்கலைத் தவிர்க்கத் தண்ணீரை இரண்டு மடக்கு குடித்துவிட்டுத் திரும்பினார். அவர் திடுக்கிட்டுப் போனார்.

நகரத்து நாராயணன் ஜுவல்லர்சின் சொந்தக்காரன் கேசவன் முதுகுப்புறம் திருப்பிக் கொண்டு மிக அருகில் வேறு ஒரு நாற்காலியில் சுவர் ஓரமாக அமர்ந்திருந்தான். தாடியும் மீசையுமான தொரு நடு வயதுக்காரன் அவன் எதிரே பேச்சுக் கொடுத்தபடி உட்கார்ந்திருந்தான்.

பல ஆயிரங்களை அசட்டையாகப் பலகை அடியில் போட்டுக் கொண்டு உட்கார்ந்து வியாபாரம் செய்கிறவன் கேசவன். இங்கே எப்படி வந்தான்?

நகரத்தில் உள்ள பிரபல ஹோட்டல்களை விட்டு இந்த ஒதுக்குப்புறமான இடத்திற்கு ஏன் வந்தான்? அவனுக்கும் ஒரு சமயம் அந்த ஹோட்டலின் பரோட்டா மீது மோகமோ?

"கேசவா எங்கே இப்படி?" என்று கூப்பிட்டு நலன் விசாரிக்க விரும்பினார். அந்தப் பக்கம் திரும்பியவர் சட்டென்று வாயை அடக்கிக் கொண்டார்.

"தம்பி! இந்த இடத்திலேதான் சாவகாசமா நிம்மதியா பேச முடியும்னு கூட்டிகிட்டு வந்தேன். பார்க்கிறவங்களுக்குச் சந்தேகம் ஏற்படாது பார்."

சுவாமிநாதன் தோளின் மேலிருந்த துண்டைத் தலையில் போட்டுக் குளிருக்கு மப்ளர் கட்டிக் கொள்வது போல முகத்தைப் பாதி மறைத்துக் கொண்டார்.

அவரது நெஞ்சு தீவிரமாகத் துடித்தது. தாடிக்காரனின் பேச்சு ஒரு தினுசாக இருக்கிறதே? ஊன்றிக் கேட்டார்.

"எனக்கு ரொம்ப பயமா இருக்கு. முன்னே என்னவோ விளையாட்டுப்போக்கிலே கொஞ்சம் காரியம் செய்துட்டேன்."

"தம்பி! முன்னே வச்ச காலை பின்னே வைக்காதே. சட்டுனு பணம் பண்ணணும்னு நியாயம் சத்தியம்னு பார்த்தா ஆகாது. இப்போ அதிகாரிகள் ரொம்ப உஷாராக இருக்காங்களே. அதுக்காகத்தான் பெரிய பொருளில் இனிமேல் சம்பந்தப்பட வேண்டாம்னு, இந்தச் சின்ன சங்கதிகளில் இறங்கலாம்னு யோசனை சொல்ல இங்கே கூட்டிக்கிட்டு வந்திருக்கேன்."

"இது மற்ற விஷயங்களை விட ரொம்ப பெரிய தப்பாச்சே."

"என்ன தப்போ தம்பி. ஊரில் யார் யோக்கியமாக வாழுறான். அவனவன் இது மாதிரி ஏதாச்சும் செய்து பங்களாவும், காருமா சொகுசா வாழ்கிறான்."

"இருந்தாலும் ஸார் இது பல இளைஞர்களுடைய துன்பத்து மேலே நாம் வசதி தேடிக்கிறாப் போல இல்லையா?"

"ஒருத்தனைக் கொன்னுதான் இன்னொருத்தன் வாழ முடியும்னு இயற்கையின் நியதி. இதுக்குப்போய் நீதர்மம், நியாயம்னு பார்த்தா சரிபடாது. அடுத்த சந்திப்பின்போது எங்கே எப்படின்னு சொல்றேன். கால் கிலோ சங்கதி நம்ம கிட்ட கைவசம் இருக்கு. நாம இரண்டு பேர் மட்டுமே இதிலே ஈடுபடலை. உலக முழுவதும் ஒரு கோடு போட்டாப்பல, பல தொடர்புகள் இதுக்கு இருக்கு. நூறு பொட்டலம்னு சொன்ன இடத்திலே அப்பப்போ சேர்த்துக்கிட்டிருந்தா கணிசமா கமிஷன் கிடைக்கும்."

தொண்டை செருமும் சத்தம் கேட்டதும், சுவாமிநாதன் குனிந்து கொண்டார். அவருக்கு மூச்சு முட்டியது.

பையன் நல்லவன் என்று நினைத்தோம். பாவி போதை மருந்து கடத்தலில் சேர்ந்துவிட்டிருக்கிறான் போலிருக்கு...

விமலாவின் ஆஸ்பத்திரி செலவுக்கு, இந்த பாவப் பணத்தையா அள்ளிக் கொடுத்தான்.

'சே! இது தெரியாமல் அந்த காசை வாங்கி கை கறை பட்டுடுத்தே, சிவ சிவ....' என்று எண்ணி அரண்டு போனவர், மேலே பரோட்டாவை ருசிக்க முடியாது அரைகுறை சாப்பாட்டுடன் எழுந்து வெளியே வந்து கல்லாப் பெட்டியிலிருந்தவரிடம் காசைக் கொடுத்துவிட்டு அங்கிருந்து வெளியே வந்தார்.

முதலில் அந்த காசை கேசவனிடம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். அதை விட பட்டினி கிடந்து சாவதே மேல்.

உழைத்து உண்மையாகப் பாடுபட வேண்டிய இளைஞன், இப்படி குறுக்கு வழியிலா இறங்கித் தொலைய வேண்டும்? இப்படியே ஒவ்வொரு இளைஞனும் சீக்கிரம் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற கொள்கையில், தாறுமாறாகச் செயல்பட்டால், வருங்காலம் என்னாவது?

சுவாமிநாதன் வேதனையுடன் சிந்தித்தபடி நடந்தார்.

(தொடரும்)

# கோயிலுக்குச் சென்ற

வாசகர் பங்கு

## அர்ச்சகர் கவனத்தை ஈர்க்க

வந்திருந்த பக்தர்களிடையே பிராம்மணர்களாகப்பார்த்து அர்ச்சனைத்தட்டை வாங்கிக் கொண்டிருந்தார் அந்த அர்ச்சகர். சிறிது நேரம் காத்திருந்து பார்த்துவிட்டு அவர் எங்களைக் கவனிக்கும் வழியாய் இல்லை என்று தெரிந்து கொண்டதும் என் அம்மா, "மாமா இதைப் பிடியுங்கோ" என்று 'பிராம்மண மொழி'யில் சொன்னதுமே அவர் எங்கள் அர்ச்சனைத் தட்டை வாங்கிக் கொண்டுவிட்டார்!

— கே. பிரபாவதி, கொக்கேரி.

## காசேதான் கடவுளா?

சமீபத்தில் பழநி சென்றிருந்தேன். அடிவாரத்தில் கடைக்காரர்களின் அட்டகாசமும், வழியெல்லாம் பிச்சைக்காரர்களின் தொல்லையும், போதாக்குறைக்கு அலுவலகத்திலிருந்து ஒலி பெருக்கி மூலம் சாமி தரிசனம்



செய்வதற்கு 'ரேட்' எவ்வளவு என்பது போன்ற அறிவிப்புகளுமாகச் சேர்ந்து, மொத்தத்தில் காசில்லை என்றால் கடவுளே இல்லை என்ற எண்ணத்தை ஏற்படுத்திவிட்டன.

— ந. சொக்கலிங்கம், பனையப்பட்டி.

## விளக்கேற்றக்கூடப் பணம்!

இந்தியாவின் தென்கோடியிலிருந்து வடகோடிவரை சென்று கேதார்நாத்தைத் தரிசிக்க முடிந்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதினேன். ஆனால் ஆதி சங்கரர் மறைந்த இடத்தில் அமைந்துள்ள கோயிலின் அசுத்தமும், விளக்குகூட ஏற்றாத நிலையில் அந்த இடம் பொலிவின்றி இருந்ததும் என்னை வருத்தமடையச் செய்தன. அந்தக் கோயிலின் பண்டா 'பணம் கொடுத்தால் விளக்கு ஏற்றுவேன்' என்று சொன்னதுதான் எல்லாவற்றையும்விட அதிர்ச்சி.

— மீனாட்சி கைலாசம், பெங்களூர்—42.

## பெருமாள் முன்னிலையில் கொடுமை

திருப்பதியில் வழக்கமான நெரிசலுக்கும், ஜருகண்டி கூச்சலுக்கும் இடையே ஆழ்ந்த தியானத்தில் இருந்தார் ஓர் இளைஞர். சிப்





பந்திகள் அவர் கழுத்தைப் பிடி
யாக அவரை ஒரு தள்ளு தள்
விழுந்து கீழே விழுந்துவிட்டார்.
இளம் மனைவி மயக்கமடைந்
இத்தனையும் அந்தப் பெருமா
யிலேயே நடந்துவிட்டன. அ
சுவாமி தரிசனம்?

— ந. மோகன், அ

## அமைதியான ஆலயம்

சேலத்துக்கு வெகு அருகே உ
யில் (ஸ்கந்தகிரி) ஸ்ரீமத் ஸத்குரு
ஸ்வாமிகள் அமைத்துள்ள அ
ஒன்று உள்ளது. இங்கு உண்



யாது; பணம் கொடுக்க விரும்
பெற்றுக் கொண்டுதான் தரவ
கள் பெயருக்கு அர்ச்சனை
நேரத்தில் தீபாராதனையும்
அவர்கள் நிச்சயித்த நேரத்தி
அன்றாடப் பூஜைகள் நடக்கின்
யான ஆலயம் இது.

— ஷ்யாமளா
கே

## இதுதான் பக்தியா?

ஆவணி மாதம். மதியம்
மணி இருக்கும். தஞ்சை
கோயிலில் ஒரு பன்னிரண்டு
வனை அங்கப் பிரதட்சணம் செ
திக் கொண்டிருந்தார்கள். அவ
சூடு தாங்க முடியாமல் அல
கொண்டிருந்தான். அந்த நேர
தரிசனம் செய்யப் போன எ
காட்சி மிகவும் பாதித்தது.

— ஏ.எம்.என். லட்சுமி

## கோயிலிலும் அரசியல்!

எங்கள் ஊரில் திருவிழா ந
ரனிய பக்தர் ஒருவர் அம்மனு
மாலையைச் சாற்றிய குருக்கள்,

ாத குறை
ம். நிலை
பருடைய
ரிந்தார்.
ா சந்நிதி
றம் ஏது

காணம்.

யப்பட்டி
ந்தானந்த
ஆலயம்
ல் இடை.

றல் ரசிது
; மனிதர்
நினைத்த
வதில்லை.
தவறாமல்
. அமைதி

ரிஹரன்,
ம்புத்தூர்.

ளிரண்டு
ரியம்மன்
பதுச் சிறு
வற்புறுத்
தரையின்
தவித்துக்
ல் சுவாமி
ன இந்தக்

ஞ்சாவூர்.

த சமயம்,
ந அளித்த
வரசியல்

# போது...



பிரமுகர் வரக்கண்டு, அந்த மாலையை எடுத்து அவருக்கு அணிவித்துவிட்டார். இதைப் பார்த்துக் கொண்டே நின்ற எளிய பக்தரின் கண்கள் கலங்கிவிட்டன.

— வி. தனலக்ஷ்மி, கோவில்பட்டி.

## கலைந்து போன கனவுகள்

முதல்முறையாகச் சபரிமலைக்குப் போகையில் புனித பம்பா நதியின் வசீகரமான சூழலைப் பற்றிய இனிய கனவுகளுடன் சென்றேன். ஆனால் அங்கு நான் கண்ட காட்சியோ சகிக்க முடியவில்லை! நதிக்கரையெங்கும் மலம் கழித்த அசிங்கம்! அந்த நதி நீரில் குளிக்க வேண்டும் என்றபோது மனத்தைப் பிசைந்து, பிடுங்கியது.

— எஸ். வி. சுப்ரமணியன், புது டெல்லி.

## செருப்புடன் சென்ற நடிகை

திருநீர்மலை சென்றிருந்தபோது தெலுங்குப் படம் ஒன்றிற்கான படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. பிரபல நடிகையும் நடிகரும் கோயிலில் அர்ச்சனை செய்வது போன்ற காட்சி. அக்காட்சியில், நடித்த நடிகை ராதா கோயிலுக்குள் கால் செருப்புடனேயே நுழைந்துவிட்டார். இது எனக்கு மிகுந்த வேதனையை அளித்தது.

— என். ரேவதி, சென்னை—44.

## பொன்னான பொற்கோயில்

குடும்பத்தோடு அமிர்தசரஸ் சென்றிருந்தேன். அங்கே பொற்கோயிலில் எல்லாவற்றிலும் ஒரு சீரான ஒழுக்கம். நல்ல நெய்யிலான பிரசாதம். அதை விநியோகிப்பதில் ஒரு முறை, மெல்ல தவழ்ந்து வந்த சீக்கிய பக்தி கீதங்களின் ஒலி, துப்புரவான சூழ்நிலை, எல்லாமுமாகச் சேர்ந்து மன நிறைவையும் அமைதியையும் தந்து, பக்தியையும் ஏற்படுத்தின.

— ப. நாகராசன், வயலூர்.

## சாமி! வரம் கொடுத்தும்.....

கல்லூரிநாட்களில்சுற்றுப்பயணம்சென்றபோது வட இந்தியாவிலுள்ள மதுராவுக்குப் போனோம். அங்கு ஒரு கோயிலில் மூல விக்ரஹம் திரையால் மறைக்கப்பட்டிருந்தது. நாங்கள் சுற்றுலாப் பயணிகள் என்று அறிந்ததும், "காசு கொடுத்தால் திரையை விலக்குவோம். இல்லையேல் இரண்டு மணி நேரம் கழித்து வந்து சுவாமி தரிசனம் செய்யுங்கள்" என்றுகூறிவிட்டார் கோயில் குருக்கள். இரண்டாயிரம் கிலோ மீட்டர் பிரயாணம் செய்து இறைவனைத் தரிசிக்கப் போனால் இப்படியோர் அனுபவம்!

— செ. அன்பு மதியழகன்,
கொப்பம்பட்டி.

## தனியே நிற்கும் கிருஷ்ணன்

எங்கள் ஊர் ஆதி நாராயண சுவாமி கோயிலின் இரண்டு விலை மதிக்க முடியாத சிலைகள் (ருக்மணி, சத்ய பாமா) திருடு போய் மீட்கப்பட்டு ஐந்தாறு வருடங்கள் ஆகிவிட்டன. ஆனால் வழக்கு முடியாததால் அவை இன்னும் கோயிலுக்குத் திருப்பித் தரப்படவில்லை. விழா நாட்களில் கிருஷ்ணர் மட்டும் தனியே இருப்பதைப் பார்க்க மனத்துக்கு மிகவும் சங்கடமாக இருக்கிறது.

— பூரண ஜெய ஆனந்,
ஸ்ரீவைகுண்டம்.

## வேதனை அளித்த சம்பவம்

என் தங்கையுடன் திருச்சி உச்சிப் பிள்ளையார் கோயிலுக்குப் போனபோது தாயுமானவர் சந்நிதியில் இருந்த குருக்கள் எங்களைக் காதல் ஜோடி என்று எண்ணி "கவலைப்பட வேண்டாம், சீக்கிரமே உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிடும், வீட்டில் தடை சொல்லவே மாட்டார்கள்" என்ற ரீதியில் பேசிக் கொண்டே போனார். அதிர்ந்து போய் வேதனைக்குள்ளானோம் நாங்கள்.

— எஸ். மாணிக்கவாசகம், கோடிக்கரை.

## அபசகுனமான செயல்

சில கோயில்களில் சுவாமிக்குக் கற்பூரத் தீபாராதனை காட்டிவிட்டு, உடனே கற்





பூரத்தை அணைத்து விடுகிறார்கள். நாம் ஆசையுடன் வாங்கிக் கொடுக்கும் கற்பூரத்திற்கு ஏற்படும் இந்தக் கதி என் போன்ற சிலருக்கு அபசகுனமாகத் தோன்றுகிறது.

— ரா. சந்திரா, திருநெல்வேலி.

### அன்பர் பணியில் இன்பம்

காஞ்சிபுரத்தில் நான் இருந்தபோது, காமாட்சியம்மன் கோயில் பிராகாரத்திற்கு வெளியே, பக்தர்கள் குங்குமப் பிரசாதத்தை பொட்டலம் கட்டிக் கொள்ள வசதியாகச் சிறு காகிதத் துண்டுகளை ஓர் அன்பர் வழங்கி வந்ததைப் பார்த்தேன். அந்த ஊமை பக்தர் காலமானதும், அவர் நின்ற இடத்தில் தினமும் சில காகிதத் துண்டங்களைக் கிழித்து வைக்கும் காரியத்தை காஞ்சியில் இருந்த வரையில் நான் செய்து வந்தேன்.

— கே. பாலசுப்ரமணியன், சிவகங்கை.

### ஓசியில் விளம்பரம்

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் புதிதாக உருவாகியுள்ள கல்யாண சுந்தரேசுவரர் சன்னதிக்குச் செல்பவர்கள் அதைத் திறந்து வைத்த இன்றைய அமைச்சரின் பெயரும் தக்காரின் பெயரும் சன்னதியின் முகப்பில் பெரிதாகக் கருங்கல்லில் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். வானளாவி நிற்கும் கோபுரங்களைக் கட்டிய மன்னர்களின் பெயர்கள் எந்த மூலையில் இருக்கிறதோ, தெரியாது. மக்கள் பணத்தில் ஒரு சந்நிதியை உருவாக்கியதற்காக இப்படி சிலர் விளம்பரம் தேடிக் கொள்வது துளியும் நன்றாக இல்லை.

— செண்பகவள்ளி மாடசாமி,
கிடாத்திருக்கை.

### காசியில் நடந்த அக்கிரமம்

காசி விசாலாட்சி கோயில் சந்நிதியில் அர்ச்சனைத் தட்டை என் தந்தை நீட்ட, அதை வாங்கிய பண்டிட் என் தந்தையின் கையிலிருந்த மோதிரத்தைப் பிடித்து இழுக்க ஆரம்பித்துவிட்டார். இந்த அக்கிரமத்தைக் கண்டும் காணாமல் பலர் சொல்ல, என் அண்ணன்தான் தந்தையின் கையை அந்தப் பண்டிட்டின் பிடியிலிருந்து விடுவித்தார்.

— ஏ. நளினி, சென்னை—61.

### சொல்லடி பட்டேன்

ஒரு மாதத்துக்கு முன்பு மதுரை மீனாட்சி அம்மன் கோயிலுக்கு நண்பனுடன் போனேன். குங்குமப் பிரசாதத்தை ஊருக்கு எடுத்துச் செல்ல எண்ணி ஒரு சிறு காகிதத் துண்டைக் குருக்களிடம் நீட்டினேன். "குங்குமம் கிலோ அறுபது ரூபாய் விற்கிறது! அவனவன் பேப்பரைத் தூக்கிக்கிட்டு வந்துடறான்" என்று அந்த அர்ச்சகர் சொன்னபோது மனக் கஷ்டமே மிதமிஞ்சி ஏற்பட்டது.

— ஆர். இராமரத்தினம்,
இஞ்சிக்கொல்லை.

### இது நியாயமா?

புதுவை மணக்குள விநாயகர் கோயிலில் சிதர் தேங்காய் உடைத்தால் அதற்கென வைத்துள்ள ஒரு தொட்டிக்குள்தான் உடைக்க வேண்டும். தேங்காய்ச் சில்லுகளை ஏழைகள் எடுத்துச் செல்ல அனுமதிப்பதில்லை. அவற்றைச் சேகரித்து மூட்டை கட்டி ஓட்டல்கள் போன்ற இடங்களுக்கு விற்றுவிடுகிறார்கள்!

— மு. பன்னீர் செல்வம், புதுவை—8.

### இனிய அதிர்ச்சி

தமிழகத்தில் வி.ஐ.பி.கள் கோயிலுக்கு வந்தால் சிப்பந்திகளும், அர்ச்சகர்களும் விழுந்து விழுந்து உபசரிக்கக் கண்டு பழகிய எனக்குத் திருவனந்தபுரம் பத்மநாபசுவாமி கோயிலில் ஓர் இனிய அதிர்ச்சி. "சற்று விலகுங்கள்" என்று பின்னால் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தால், முதலமைச்சர் கருணாகரன் பொது மக்களுள் ஒருவராக நின்று கொண்டிருந்தார்!

— ஆர். ஹரிஹரன், திருவனந்தபுரம்.

ப்ளோப்ளாஸ்ட் நிறுவனம் வழங்கும் வி.ஐ.பி. சூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

செ. அன்பு மதியழகன்,
அன்பு இல்லம்,
கொப்பம்பட்டி அஞ்சல்,
திருச்சி மாவட்டம், 621 012.



## ஏ.சு.நல்லபெருமாள்

### 20. பரணிக்கு ஏற்பட்ட சோதனை!

வெள்ளிப் பொம்மையைப் பெட்டிக்குள் துணிமணிகளுக்கு அடியில் போட்டுப் பூட்டினான் பரணி. ஆனால், ராதையை கிருஷ்ணன் அணைத்திருக்கும் கோலம் பெட்டியிலிருந்து வெளிக் கிளம்பி அவனுடைய மனத்தை முழுவதுமாகவல்லவா ஆட்கொண்டிருந்தது! இரவில் ஜாமத்திற்கு மேலும் உறக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான்.

கிருஷ்ணனின் அணைப்பும், ராதையின் ஒயிலான உடலும், நினைவில் குறுகுறுத்துக் கொண்டே இருந்தன. பரணிக்குத் தன் மீதே கோபம் எழுந்தது—

இந்த மனத்தை அடக்கியே தீர வேண்டும். கேவலம் இதைக்கூட நான் செய்ய முடியவில்லை என்றால் பிறகு நான் எதைத்தான் சாதிக்க முடியும்? விவேகானந்தர் அடக்கினாரே! ராமகிருஷ்ணர், மனைவியை அருகில் வைத்துக் கொண்டே பிரும்மச்சாரியாக இருந்தாரே......

பரணி கண்களை மூடியபடி உறங்க முனைந்தான். ராதா வீட்டுக் கடிகாரம், அபஸ்வரத்தில் பன்னிரண்டு முறை பாடியது. ராதா வீட்டினுள்ளிருந்து விளக்கு வெளிச்சம் ஜன்னல் வழியாக வெளி முற்றத்தில் விழுந்து கொண்டிருந்தது. மாடியில் விளக்கு வெளிச்சம் இல்லை. சந்திரசூடன் உறங்கிவிட்டார். தெருவில் சற்று தூரத்தில் நாய் குரைத்தது. கூர்க்கா ஒருவன், 'நான் வருகிறேன், எங்காவது திருடனிருந்தால் பதுங்கிக் கொள்ளலாம்' என்பதுபோல் விசில் ஊதிக் கொண்டு சென்றான்.

பரணிக்குமீண்டும்பொம்மையின் நினைவு வந்தது. அந்தப் பொம்மை கிடைப்பதற்கு முந்தின இரவில் கண்ட கனவு நினைவில் குறுகுறுத்தது..

சேச்சே, எந்த நினைவை அகற்ற வேண்டும் என்று எண்ணுகிறேனோ, அது, தண்ணீருக்குள்ளிருந்து எழும்பும் ரப்பர் பந்து போல் மேலே மேலே வந்து கொண்டேயிருக்கிறது. மனத்தை அடக்குவதல்லவா புருஷ லக்ஷணம். ஆனால் இந்த மனம் சண்டித்தனம் செய்கிறதே. இரண்டு நாட்களுக்கு முன்பு நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியை மீண்டும் மீண்டும் நினைவிற்குக் கொண்டு வருகிறதே! மறந்துவிட வேண்டும் என்ற முயற்சி பலிக்கவில்லை —

இரண்டு நாட்களுக்கு முன்பு இரவு ஜாமத்திற்குப் பிறகு கோபால் வந்தபோது, வழக்கம் போல் ராதாவும் அவனும் அவரைக் கைத்தாங்கலாக வீட்டிற்குள் அழைத்துச் சென்று படுக்க வைத்தார்கள். படுக்கையில் விழுந்த கோபால் புரண்டார்.





"அடுத்த அறையில் தலையணை இருக்கிறது எடுத்து வருகிறேன் அண்டை வைக்கலாம். இல்லையென்றால் உருண்டு கீழே விழுந்துவிடுவார்" என்று கூறிவிட்டு ராதா அடுத்திருந்த அறைக்குள் சென்றாள். விளக்கை ஏற்றாமலேயே தலையணைகள் அடுக்கப்பட்டிருந்த குவியலிலிருந்து ஒரு தலையணையை உருவினாள். திடீரென்று அவள் மீது ஏதோ ஒன்று மோதிவிட்டுக் கீழே குதித்து ஓடியது. ஐயோ என்று அலறியபடி வாசலை நோக்கிப் பாய்ந்தாள்.

அவளுடைய அலறலைக் கேட்ட பரணி அறைக்குள் ஓடி வந்தான். பயத்தினால் அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்ட ராதா நடுங்கிக் கொண்டிருந்தாள்.

"என்னது?" பரணி கேட்டான். அவனை இன்னும் இறுகப் பற்றிக் கொண்டாள். பயத்தினால் வாய் குழறியது.

"ஏதோ என் மேல் குதித்து ஓடுகிறது" என்றாள். பரணியின் பார்வையில் பூனை தெரிந்தது.

"பெரிய சூரப்புலி. பூனை ஓடுகிறது. இதற்கா இப்படி அலறினீர்கள்?" என்றவாறே அவளுடைய பிடியிலிருந்து விடுபட முனைந்தான்.

ராதாவின் உடல் நடுங்கியதை உணர்ந்தான். அவனை முழுவதுமாகப் பற்றி ஆக்ரமித்திருந்தாள். அந்தச் சில விநாடிகளில் பரணியின் உணர்வுகள் பரபரத்தன. அதுவரை அவன் உணர்ந்திராத அனுபவம். சில விநாடிகள்தாம். அது மின்சாரத்தின் ஓட்டம் போல் அவனுடைய உடல் முழுவதும் பரவிச் சிலிர்க்க வைத்துவிட்டதை உணர்ந்தான். அறிவு, விலகும்படி எச்சரித்தது. மனம், லயித்திருக்க விரும்பியது. உள்ளூரப் பரபரப்பு. ஓர் உணர்வு முதுகுத் தண்டில் கீழ் நோக்கி ஊர்ந்தது. சில விநாடிகளுக்குத் தன்னை இழந்தவனாய் அப்படியே நின்றான்.

"மியாவ்" என்று பூனை முன் வாசலில் நின்று கத்திவிட்டு வெளியேறியது.

"சரிவிடுங்கள் பூனை ஓடிவிட்டது. பூனைக்கு இவ்வளவு பயமா?" என்றபடியே தன்னைச் சுற்றியிருந்த ராதாவின் கரங்களை மெல்ல விலக்கினான் பரணி.

ராதாவின் மாராப்பு நழுவிக் கீழே விழுந்திருந்தது. வியர்வையில் ரவிக்கை நனைந்திருந்தது. அவனை விட்டு விலகி மாராப்பை எடுத்து சரியாக அணிந்து கொண்ட ராதா,

# உணர்வுகள் உறங்குவதில்லை

''திடீரென்று என் தோள் மேலேயே குதித்து விட்டது. என் இருதயமே நின்றுவிட்டது'' என்றவாறே முன் அறைக்கு வந்தாள். அவளுடைய முகத்தில் பயத்தின் சாயல் இருந்தது.

அந்த நிகழ்ச்சி அவனை அன்று என்ன பாடுபடுத்திவிட்டது! இப்போது அவனுடைய நினைவில் வரும் ராதாகிருஷ்ணன் பொம்மையைப்போல்தான் அன்றுராதாவை அவன் தாங்கி நின்றான்.

ஓ.....! அது என்ன அபூர்வமான அனுபவம்! அன்று இரவு முழுவதும் அதே நினைவு தான். அவனுடைய உடலும் உள்ளமும் பரபரத்துக் கொண்டிருந்தன. ஒரு பெண்ணின் மென்மையும்திண்மையும்அவனுடைய உடல் மீது பதிந்து எவ்வளவு உணர்வுகளைக் கொட்டிக் காட்டின!

அவளை ஆதரவிற்காகப் பற்றிய அவனுடைய கரங்கள் உணர்ந்தவைகள், உண்மையிலேயே எதேச்சையாக நடந்தவையா அல்லது கரங்கள், அவனையும் அறியாமல் வேண்டுமென்றே அவளைத் தேடிப் பற்றினவா? அவனுக்கே சந்தேகம் வந்துவிட்டது. அந்தச் சில வினாடிகளில் அவன் ஏதோ தவறு செய்துவிட்டதாக உள் மனம் உறுத்தியது.

ஐயோ, என் மனத்தின் குரங்குத்தனம் ராதா அக்காளுக்குத் தெரிந்தால் என்னைப் பற்றி எவ்வளவு கேவலமாக எண்ணுவாள். நல்ல வேளை அவள் பயத்தில் எதையும் உணரவில்லை....

மகாத்மா காந்தி இந்த மனத்தின் விஷயத்தில்தானே எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்றார். இந்த மனத்தை ஒடுக்கிப் பூட்டி வைத்தே ஆக வேண்டும். நான் நைஷ்டிக பிரும்மச்சாரி. விவேகானந்தர் மாதிரி நான் விளங்க விரும்புகிறேன். ஒரு பெண்ணின் உடலும்,மரக்கட்டையும்எனக்குஒன்றுதான். ஓம் சாந்தி, ஓம் சாந்தி, ஓம் சாந்தி......

பரணி கண்களை மூடிக் கொண்டு தியானிக்கத் தொடங்கினான். வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

இரவு எவ்வளவு நேரத்துக்குப் பிறகு தூங்கினானோ, காலையில் ஏழு மணியாகியும் விழிக்காமல் திண்ணையில் உறங்கிக் கொண்டிருந்தான். அவன் எழுந்திருக்காததைக் கண்ட பார்வதி துணுக்குற்றாள். காலையில் சந்திரசூடனுக்கு டீ வாங்கிக் கொடுப்பவன் அவன். எழுப்ப நினைத்தாள். ஆனால் எழுப்பாமல், தானே டீயைத் தயாரித்துக் கொண்டு சந்திரசூடனிடம்கொடுக்கமாடிக்குவிரைந்து சென்றாள்.

அவள் மாடிக்குச் சென்றபோது சந்திரசூடன் சாய்வு நாற்காலியில் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையிலிருந்தார்.

காலையில் படுக்கையிலிருந்து எழுந்து வெற்றிலையைப் போட்டுக் கொண்ட பிறகும் சந்திரசூடனுக்கு உற்சாகம் பிறக்கவில்லை. இரவெல்லாம் அவருடைய உறக்கத்தை பல நினைவுகள் கெடுத்துக் கொண்டிருந்தன. சக்தி சிவத்தைப் பற்றிய நினைவுதான் அவரை மிகவும் குழப்பியிருந்தது. சக்தி சிவத்தின் சித்து சக்தியை உணர்ந்ததிலிருந்தே அவருடைய மனம் பரபரத்துக் கொண்டிருந்தது.

எவ்வளவுதான் பகுத்தறிவைப் பற்றி பேசினாலும் அறிவுக்கு எட்டாத சில காரியங்கள் நடைபெறும்போது பகுத்தறிவு குழம்புகிறது. இப்போது கண்கூடாகவே பார்த்துவிட்டார், வெள்ளிப் பொம்மையை. பரணிக்குச் சக்தி சிவம் கொடுத்தது. அவ்வளவு காலமாக சக்தி சிவத்தோடு நெருங்கிப் பழகும் தனக்கு அவர் எதுவும் கொடுக்காததைப் பற்றி எண்ணிப் பார்த்தார். வியப்பாயிருந்தது. பரணிக்கு அருளியிருக்கிறாரே!

பரணி கேட்டான். கொடுத்தார். நான் அவரிடம் எதுவுமே கேட்டதில்லை. எனக்கென்று கேட்க என்ன இருக்கிறது? அவரிடம் எதுவும் கேட்க வேண்டாம். அவருக்கருகில் மௌனமாக அமர்ந்திருந்தாலே உள்ளத்தில் ஆனந்தம் பொங்குகிறதே! இதைவிட உயர்வாகக் கேட்டுப் பெற வேறென்ன இருக்கிறது?

சக்தி சிவத்திடம் ஒரு விஷயம் பற்றிக் கேட்க வேண்டுமென்று சந்திரசூடன் அடிக்கடி எண்ணியதுண்டு. ஆனால் கேட்காமலேயே திரும்பிவிடுவார். முத்துராமனின் மனத்தை மாற்றி அவனை நிரந்தரமாகத் திருத்திவிட வேண்டும் என்று அவரிடம் கேட்க வேண்டும் என்ற எண்ணம்.

சந்திரசூடனுக்குஉள் ளூர அரிப்பு.முத்துராமனை சிபார்சு செய்து சிறையிலிருந்து மீட்டுக்கொண்டு வந்ததிலிருந்து அவருடைய மன அமைதி குலைந்திருந்தது. எந்தச் சமயத்திலும் ஏதாவது செய்து விடுவானோ என்ற பயம். ஆனால் இது விஷயத்தில் பிடிவாதத்துடனிருந்தார். சூழ்நிலை மாறிவிட்டால் மனிதனும் மாறிவிடுவான் என்பதில் அவருக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால் 'பாரம்பரியமாகத் தொடரும் குணத்தையும், சில வியாதிகளையும் எந்தச் சூழ்நிலையாலும் மாற்றி விட முடியாது' என்றுகுமார் கூறியபோதெல்லாம் சந்திரசூடன் குழம்பினார்.

''என்னைப்பார்த்தாமுப்பதுவயசான மாதிரியா தெரியுது?''

''ஒரு ஏழெட்டு வருஷத்துக்கு முன்னாலே அப்படித் தெரிஞ்சிருக்கலாம்; இப்போ அப்படித் தெரியலே!''

— அ. தெய்வசிகாமணி.






# GOPI
# Kitchen Machine




''சமையலறையில் எனக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்கிறது கோபி. ஏன் தெரியுமா ?

கோபி மெஷினுடன் நவீன தொழில் நுட்பத்தையும், எந்தவிதக் கூடுதல் செலவின்றி, ஒன்றல்ல மூன்று ஜாடிகளும் கிடைக்கின்றது.

ஆகவே ப்ளெண்டிங், ட்ரை க்ரைண்டிங், வெட் க்ரைண்டிங், அல்லது எது வேண்டுமானாலும் கோபியில் மட்டுமே நொடிகளில் செய்ய முடியும். கூர்மையான பிளேடுகளைக் கையாளுதல் போன்ற தொல்லை எதுவும் இல்லை.

ஒவ்வொரு ஜாடியையும் தனித் தனியாக உபயோகிக்கலாம். அவற்றை தனித் தனியாக வாங்க வேண்டிய அவசியமில்லை. அதனால் எவ்வளவு பணம் மிச்சப்படுகிறது தெரியுமா !

கோபி மெஷின் மிகவும் சிறந்தது. அதனால் தான் உங்களுக்கு 5 ஆண்டு உத்தரவாதமும் (மோட்டார் உள்பட) ஆயுள் முழுவதும் இலவசச் சேவையும் கிடைக்கின்றன.

ஒரு பெண்ணுக்கு இதைவிட வேறென்ன வேண்டும்? கோபி இருக்கும்போது நான் சமையல் கலை வல்லுனராகவே உணர்கிறேன்''

கோபியை இப்பொழுது உங்களுக்கு 'தெர்மாகோல்' பேக்கிங்குடன் அளிக்கின்றோம். தெர்மாகோல் பேக்கிங்கை 1) ஹாட்கேஸ் 2) ஐஸ் பாக்ஸ் 3) பிக்னிக் கேஸ் ஆக உபயோகிக்கலாம்.

## இலவசம்

ஒவ்வொரு கோபி மிக்ஸியுடன் ஒரு பெரிய

## நிர்லெப்

டெஃப்லான் பூசிய தோசைக்கல்




வேண்டுமானால்
வாங்க கூடிய
சேகரிப்பு பாத்திரம்.

கர்நாடகா, ஆந்திரா மற்றும் தமிழ்நாட்டிற்கு விநியோகஸ்தர்கள்:

**திரிப்தா மார்கெட்டிங் பி. லிட்.,**

139, பாரதி சாலை (பைகிராப்ட்ஸ் ரோடு),
சென்னை 600 014. போன் : 88599
பெங்களூர் போன் : 563322 ஹைதராபாத் போன் : 221224.

Adhiti/M/418

முத்துராமனின் பாரம்பரிய விஷத்தைக் களையும்படி சக்திசிவத்திடம் வேண்ட வேண்டும் என்ற எண்ணம் தோன்றுவதுண்டு. ஆனால் அதே வேளையில் பாரம்பரியத் தொடர்ச்சியில் அவருக்கு நம்பிக்கை இல்லை. நம்பாதபோது, அப்படி ஒன்று இருப்பதாக எண்ணி சக்திசிவத்திடம் கேட்பானேன்?

முந்தின நாள் மாலையில் சந்திரசூடன் பத்திரிகை அலுவலகத்திலிருந்தபோது, முத்துராமன் பரபரப்புடன் அவருடைய அறையில் நுழைந்தான். அவனைக் கண்டதும் சந்திரசூடன் துணுக்குற்றார். அவன் வந்த வேகத்தைக் கண்டு பயந்து போனார்.

''சார், சேட் கடையில் வேலை கிடைத்து விட்டது'' என்றவாறே வேலைக்கான உத்தரவை அவரிடம் நீட்டினான்.

சந்திரசூடன் நிம்மதியடைந்தவராய் உத்தரவைப் படித்துப் பார்த்தார்.

''உங்கள் சிபார்சுதான் சார். நீங்கள் சிபார்சு செய்யப் போய்த்தான் இந்த வேலை கிடைத்தது. ரொம்ப நன்றி சார்'' உற்சாகத்தில் படபடவென்று பேசினான். அவனுடைய தோளில் தட்டிக் கொடுத்து,

''என் வாழ்த்துக்கள். எனக்கு ரொம்ப சந்தோஷமாயிருக்கிறது'' என்றார் சந்திரசூடன்.

முத்துராமன் கைப்பையிலிருந்து ஒரு பெரிய காகிதப் பொட்டலத்தை எடுத்து அவரிடம் நீட்டினான். ''சார், இது உங்களுக்கு'' என்றான்.

அதை வாங்கியபடியே ''என்னது?'' என்றார்.

''உங்களுக்கு சாக்லேட் என்றால் ரொம்பப் பிடிக்குமே.''

''ஓ.....!'' என்றவாறே ஆவலுடன் பொட்டலத்தைப் பிரித்தார். விலையுயர்ந்த சாக்லேட்கள் நிறைய இருந்தன.

''ரொம்ப தேங்க்ஸ்'' என்றவாறே ஒரு சாக்லேட் உறையைப் பிரித்து வாயில் போட்டுக் கொண்டார்.

''நன்றி சொல்ல வேண்டியவன் நான் சார்'' என்றான் முத்துராமன்.

அவன் விடைபெற்றுக் கொண்டு சென்ற பிறகு, அவனைப் பற்றி நினைத்துப் பார்த்தார். சற்று முன் அவன் பரபரப்புடன் அவருடைய அறைக்குள் நுழைந்தபோது தாம் பயந்ததை எண்ணிச் சிரித்தார்.

சேட்டின் அடகுக் கடையில், நல்ல வேலையில் அமர்ந்துவிட்டான். இனி இவனைப் பற்றிப் பயப்படத் தேவை இல்லை என்று எண்ணினார். ஆனால் உள் மனத்தில் விவரம் புரியாத ஓர் கவலை இருந்து கொண்டிருந்தது.

சட்டென்று சுயநினைவிலிருந்து விடுபட்ட சந்திரசூடன், எதிரே டீக் கோப்பையுடன் பார்வதி நின்று கொண்டிருந்ததைக் கண்டு திகைப்புடன் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''என்னது?''

''டீ.''

''ஓ.....! பரணி எங்கே?''



அவன்: ''எப்படிச் சொல்றே, அந்தச் சாமியார் ஒரு போலிச் சாமியார்னு!''

இவன்: ''திருநீறுனு சொல்லி அவர் எனக்குக் கொடுத்தது தமிழக அரசு பல்பொடி!''

— உ. ராஜாஜி.

''அவன் இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறான்.''

''காலையில் ஐந்து மணிக்கு விழித்துவிடுவானே.... உனக்கேன் சிரமம்?'' என்றபடியே கோப்பையை வாங்கிக் கொண்டார்.

''இதில் என்ன சிரமம். உங்களுக்கு எழுந்த உடன் டீ வேண்டும். அவனை எழுப்பலாம் என்றுதான் நினைத்தேன். அயர்ந்து தூங்குகிறான்'' என்றாள் பார்வதி.

டீயைக் குடித்துவிட்டு, ''இது கடையில் வாங்கும் டீ மாதிரி இல்லையே?'' என்றார்.

''நன்றாக இருக்கிறதா, இல்லையா?''

''ரொம்ப நன்றாயிருக்கிறது. அதனால்தான் கேட்டேன்.''

''நானே போட்டுக் கொண்டு வந்தேன்.''

''ஓ....! கடையில் வாங்கும் டீ இவ்வளவு மணமாயிராது.''

''இனிமேல் நானே காலையில் டீ போட்டுத் தருகிறேன்.''

''உனக்கு ஏன் சிரமம்?''

''சிரமம் ஒன்றும் இல்லை. நானே போட்டுத் தருகிறேன்.''

''ரொம்பத் தாங்க்ஸ்.'' என்றார்.

கோப்பையை வாங்கியபடியே, ''இந்த தேங்க்ஸ் எல்லாம் எனக்குப் பிடிக்காது'' என்றாள். ''முன்பின் தெரியாதவர்களுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்.''

''உதவி செய்ததற்கு ஏதாவது சொல்ல வேண்டாமா?''

''உதவி செய்வது என்னுடைய உரிமை.''

''ஓ.....! அப்படியானால், நன்றி சொல்வது என்னுடைய கடமை என்று வைத்துக் கொள்ளேன்.''

''நண்பர்களிடையே வெளிப்படையாக நன்றி சொல்வது ஒரு செயற்கை தனந்தான்'' என்று கூறிச் சிரித்தபடியே படியிறங்கிச் சென்றாள் பார்வதி.

அவள் கொடுத்த டீயின் ருசியும், மணமும் வெகுநேரம்வரை அவரை ஆட்கொண்டிருந்தன. அவள் சொல்லிவிட்டுச் சென்றது நினைவில் வட்டமிட்டது —

எனக்கு உதவி செய்வது இவள் உரிமையாமே! கடமைகூட இல்லை, உரிமை.........!

(தொடரும்)

பக்கத்து வீட்டுக் கடிகாரம் பதினோரு தடவை, அடிச்சி முடிச்சிருச்சி. வியாபாரத்துக்குப் போன இந்த மனுஷனை இன்னும் காணோம்! — நான் புரண்டு படுக்குறேன்.

சரக்கெல்லாம் இன்னும் விக்கலையா? ல்லாத்தையும் வித்திட்டு, ஒரு வழியா, நாளைக்குப் போயிக்கலாம்ன்னு, ஊர்லேயே தங்கிட்டாரா? — எனக்கு உறக்கம் பிடிக்கலே!

வெளியில பௌர்ணமி! ஆனா, இங்க அமாவாசை! நிலா வெளிச்சம் மட்டும், ரவுண்டு, ரவுண்டா என் வீட்டுக்குள்ள ஆடிக்கிட்டிருக்கு. கூரை போட்டுத் தாங்கன்னு கேட்டா, முதல்ல வீட்டைக் காலி பண்ணிக்கம்பாங்க. மூணு மாச வாடகை பாக்கி, அப்படியே நிக்கிது!

டக்குன்னு வீட்டுக்குள்ள ஒரே வெளிச்சம்! நான் முகட்டுக் கூரைய வெறிச்சுப் பாக்குறேன். கருப்பு மேகங்கிட்டேருந்து நிலா தப்பிச்சு, வெளியே போய்கிட்டிருக்கு!

எந்திரிச்சிப் போயி, சாதத்துக்கு தண்ணி ஊத்திட்டு வந்து படுக்கணும்.



# ஓர் உதயத்தின் அஸ்தமனம்

இந்த மனுஷன் திடீர்னு வந்து தொலைச்சிட்டாருன்னு..... பாவி மனுஷன்! என்ன ஜென்மம் எடுத்தாரோ? காலம் பூரா, உழைச்சி, உழைச்சி சீட்டாடினதுதான் மிச்சம்! பைசா காசு மிஞ்சலே! இந்த லட்சணத்தில, மூணு வயசுக்கு வந்த பொண்ணுங்க வேற!

பகவான் இந்தக் குடும்பத்த ரொம்ப நல்லாத்தான் சோதிக்கறான்! இந்த மூணு பொம்பளைப் பிள்ளைகளுக்குப் பதிலா, மூணு ஆம்பிளைப் பிள்ளைகளைக் குடுத்திருக்கக் கூடாது! ஒரு கழுதை இல்லேன்னாலும் ஒரு கழுதை உழைச்சிட்டு வந்து கஞ்சி ஊத்துமே! ஆயிக்குத்தான் ஒண்ணு குடுத்து வைக்கலே! இந்தப் பிள்ளைகளுக்காவது நல்ல காலம் வருமான்னு.... வரமாட்டேங்குதே! தரித்திரம் பிடிச்ச கழுதைங்க! கஞ்சிக்குச் செத்த 'கழுதைங்க வீட்ல, எவன் பொண்ணெடுக்குறேங்கறான்? காலம் பூரா, இந்த ஆத்தாளை மாதிரியே பத்தி' உருட்டி, பத்தி உருட்டி, வயித்தக் கழுவிகிட்டாப் போதும்னு சாக வேண்டியதுதான்!

இந்த தரித்திரம் பிடிச்ச மனுஷனுக்கு வாக்கப்பட்டு, என் பரம்பரையே தரித்திரம் பிடிச்சுப் போச்சு! அப்பவே எனக்குத் தெரியும்! இந்த மனுஷனுக்குச் சாமர்த்தியம் போதாது. மொரடன். சூதாடுவான்னு. எம் பேச்சை எங்க கேட்டா, என்னைப் பெத்தவ? சொந்தம் விட்டுப் போகக் கூடாது, என் தம்பியக் கட்டிக்க, கல்யாணம் ஆனா திருந்திடுவான்னு என் காலை பிடிக்காத குறையா கெஞ்சியே என் கழுத்த அறுத்துப்புட்டா!

சொந்தமாம், சொந்தம்! இப்போ அந்தச் சொந்தம்தானே என்னை சொர்க்கத்ல உக்கார வச்சி சோறு போட்டுகிட்டிருக்கு. சண்டாளி! அவளுக்கென்ன, சொந்தம் பந்தம்னு, தாலிய கட்ட வச்சிட்டு அவ பாட்டுக்குப் போய்ச் சேர்ந்திட்டா. இன்னிக்கு லோல் படுறது யாரு? நான் மட்டுமா? என்னோடு சேர்ந்து, என் பிள்ளைகளுமில்லே, சிரிப்பா சிரிக்குதுங்க! ஒரு துணிக்கு மாத்துத் துணி இல்லாம..... சே! இதெல்லாம் ஒரு பிழைப்பு!

எனக்குத் தூக்கம் சுத்தமாகக் கலைஞ்சிப் போச்சு. ரத்தமெல்லாம் சூடேறி, என் உடம்பு கூட கொதிக்கிற மாதிரி இருக்கு! மறுபடியும் நான் புரண்டு படுக்கிறேன்.

லதாவும், மாலதியும் எந்திரிச்சி உக்காந்து என் மூத்த மக மௌலிக்கு அவசர அவசரமா தலைய பின்னிகிட்டிருக்காளுங்க.

எனக்கு திக்குங்குது! இந்தக் கழுதைங்க எப்போ எந்திரிச்சாளுங்க! எங்கேயோ, வெளிய, கிளம்பிக்கிட்டிருக்கிற மாதிரியில்லே தெரியுது.

நான் கொஞ்சம் அசையாம படுத்துக்குறேன்.

''அக்கா! சீக்கிரமாக் கிளம்புக்கா! அம்மா முழிச்சுக்கும்!''

''இந்தா பையி!''

''நாங்க உன் துணிமணியெல்லாம் சாயந்தரமே, எடுத்து வச்சிட்டோம்'' லதா, பையத் தூக்கிக் குடுக்க, மௌலி அதை வாங்கிக்கிறா!

எனக்கு ரத்தமே உறைஞ்சி போவுது!

''கையில ஏதும் பணம் வச்சிருக்கியாக்கா?''

''பத்தார் ரூவா வச்சிருக்கேண்டி!''

லதாவும் மாலதியும் ஓடிப் போயி, அவளுங்க மரப் பொட்டிங்களைத் திறந்து ஆளுக்கொரு டப்பாவைக் கவுத்துக் கொண்டாந்து மௌலி கையில திணிக்கிறாளுங்க.

நான் எத்தனையோ தடவை அரிசி வாங்கணும், குழம்பு வைக்கணும்னு இவளுங்க கிட்ட போராடியிருக்கேன். ஒரு தடவை கூட இந்த மாதிரி, இவளுங்களை, இஷ்டப்பட்டு,

ஞானம்பாள் செல்வம்

எனக்குப் பணம் எடுத்துக் குடுத்ததில்லே! இந்த ஆத்தாள விட இவளுங்களுக்கு அக்காக்காரி உசத்தியாப் போயிட்டா!

''பாவாடை, தாவணி வாங்கணும்னுல்லே, நீங்க ரொம்ப நாளா சேர்த்து வச்சிருந்திங்க! அந்தப்பணத்தைஏண்டி, இப்போ என்கிட்ட கொண்டாந்து குடுக்கறீங்க!''

''எங்களுக்கு இப்போ பாவாடை தாவணி யாக்கா முக்கியம்? நீ வெளிய போயி நல்லாயிருந்தா, எங்களுக்கு ஆயிரம் பாவாடை தாவணி எடுத்துக் குடுக்க மாட்டியா? கிளம்புக்கா, எந்த நேரத்தில என்ன பேசிக்கிட்டு!''

''அப்போ.....நான் போயிட்டுவரட்டுமா?''

''அக்கா! அவரு நல்லவருதானே!''

''நல்லவர்தாண்டி! இல்லேன்னு, நான் இவ்வளவு துணிச்சலா, வீட்டை விட்டுக் கிளம்புவேனா? அவரும் நம்ப குடும்பத்து மேலே ரொம்ப அக்கறையா இருக்காரு! அவரு, வேலை செய்ற பேக்டரியிலேயே உங்களுக்கும் எப்படியாவது சின்ன வேலையாவது வாங்கித் தர்றேன்னு சொல்லியிருக்காரு! நான் முதல்ல போயி, எல்லா விபரத்துக்கும் எதிர்த்த வீட்டுச் சரளாவுக்கு அவ ஆபீஸ் அட்ரசுக்கு லெட்டர் போடுறேன். என்ன வரட்டுமா! அம்மாவை ஜாக்கிரதையா பாத்துக்கங்கடி!''

''சரிக்கா நீ கிளம்பு! அதோ அவரும் வந்திட்டாரு! சூட்கேஸோட மரத்தடியிலே நின்னுகிட்டிருக்காரு பாரு, போ!''

''அப்போ நான் வரட்டுமா?''

''அழுவாதக்கா! எங்களப் பத்திக் கவலைப் படாதே! நீ போய், சந்தோஷமா, நிம்மதியா இரு!''

என் கண்ணு முன்னால, என் மூத்த மக, கழுத்து நிறைய சங்கிலி போட்டு, தலை நிறையப் 'பூ' வச்சு, மெட்டியணிஞ்சு, பட்டுப் புடவை சரசரக்க, புருஷன் வீட்டுக்கு கலகலன்னு சிரிச்ச முகத்தோட அடியெடுத்து வைக்க வேண்டியவ, இந்த அர்த்த ராத்திரியில ஒரு துணிப் பையத் தூக்கிக்கிட்டு அனாதையா, வெளிய போய்க்கிட்டிருக்கா! என் நெஞ்சு விம்மி வெடிச்சிடும் போலிருக்கு!

கடவுளே! டக்குன்னு ஓடிப் போயி, அவளைத் தடுத்து, நிறுத்துறதுக்கு எனக்கு சக்தியக் குடுக்காம என்னை இப்படி படுக்க வச்சி, வேடிக்கை பார்த்துக்கிட்டிருக்கியே, ஏம்பா! இந்த நரகத்தில அவ, வெந்து சாகறதை விட வெளியில போறது எவ்வளவோ நல்லதுன்னு நினைச்சிக்கிட்டுத்தான் நீயும், என் காலு ரெண்டையும் இப்படிக் கட்டிப் போட்டு வச்சிருக்கியா?

என் உடம்பெல்லாம் புல்லரிச்சிப் போயி, அப்படியே வெறச்சிப் போயி கிடக்கு.

கதவு திறக்குற சத்தம்!

லதாவும் மாலதியும் உள்ளே வர்றாளுங்க! பூனை மாதிரி மெதுவா நடந்து வந்து, என்னை நல்லா உத்துப் பாக்குறாளுங்க! திருட்டுக் கழுதைங்க! இவளுங்களே, அக்காளை வழியனுப்பி வச்சிட்டு வர்றாளுங்களே! அந்த அளவுக்கு இந்த வீட்டு மேல எரிச்சலா? இல்லே, இந்த ஆயி, அப்பனுங்கள நம்பி, இனிமே பிரயோஜனமில்லேன்னு, இப்படித் துணிஞ்சிட்டாளுங்களா?

ரெண்டு பேரும் கிட்ட வந்து ஆளுக்கொரு பக்கமா, என்னை உரசிகிட்டுப் படுத்துக்கிறாளுங்க!

அவளுங்க உரசறது எனக்கு முள்ளா உறுத்துது! விடிஞ்சதும் 'எங்கடி உங்க அக்கா' ன்னு கேட்டா, என்ன சொல்லுவாளுங்க, 'எனக்குத் தெரியாதும்மா, நல்லாத் தூங்கிட்டேன்!' என்பாளுங்க.

காலையில எந்திரிச்சவொடனே, இவளுங்களை நல்லா, நாலு டோஸ் வுடணும். இல்லேன்னு இவளுங்களுக்கும்கொண்டுமிஞ்சிப் போயிடும். இந்தமனுஷன் வேறவந்தாருன்னு பெரிய எஸ்டேட்டு மாதிரிதையா, தக்கான்னு குதிப்பாரு!

வயசுக்கு வந்து பதினஞ்சு வருஷத்துக்கு மேல ஆயிடுச்சி! வகையா ஒரு பையனைப் பார்த்து, அவளைத் தள்ளிவுடுறதுக்கு வக்குல்லே! வெட்டி ரோஷம் மட்டும் இருக்கு!

''மீனாக்ஷி, மீனாக்ஷி!''

''ஐயய்யோ! இந்தமனுஷனே வந்திட்டாரு போலருக்கே. இவரு எப்படி இந்த சாமத்ல வந்து சேர்ந்தாரு? உள்ள நுழைந்தவொடனேயே 'எங்கடி, பெரிய கழுதையக்காணோம்' ன்னுல்லே கேட்டுத் தொலைப்பாரு.

நான் என்ன சொல்லப் போறேனோன்னு எனக்கு ஒண்ணுமே புரியலையே!

எந்திரிச்சிப் போயி, மெதுவா, நான் கதவைத் திறக்குறேன்! எனக்குத் தூக்கி வாரிப் போடுது!

கொஞ்சநேரத்துக்குமுன்னாலஎன்வீட்டை விட்டு ஓடிப்போன என் மூத்தமக மௌனிய, ஆக்ரோஷமா அவரு பிடிச்சு உள்ள தள்றாரு!



(பெண் பார்க்க வந்த வீட்டில்)

பையனின் தந்தை: என்னங்க இது... உங்க பொண்ணு கால் மேலே கால் போட்டுப் பேசுதே?

பெண்ணின் தந்தை: தப்பா நினைச்சுக் காதீங்க! பழக்க தோஷம்! 'டெலிபோன் ஆபரேட்டர்' ஆச்சே...!

— மா. அமிர்தலிங்கம்.

# காந்தி கிராமம் தயாரிக்கும் தரமான வீட்டு மருந்துகள் மற்றும் டானிக்குகள்

## ஒவ்வொரு குடும்பத்திலும் கைவசம் இருக்க வேண்டியவை

### வீட்டு மருந்துகள்

**ஓமவாட்டர்** — அஜீரணத்தை முழுக்க குணப்படுத்துகிறது.

**இஞ்சி எலுமிச்சை சிரப்** – பசியைத் தூண்டுகிறது.

**இஞ்சி முரபா** – (ஜிஞ்சர் முரபா) (அதரக்) – ஜீரண சக்தியை அதிகரிக்கிறது.

**பாவன ஜீரகம்** – தலைச் சுற்றலை நிறுத்துகிறது. வாயு உபாதையை போக்குகிறது.

**பாவன கடுக்காய்** – ஜீரண அபிவிருத்திக்கும் மலச்சிக்கலைப் போக்கவும் பயன்படுகிறது.

**ஆயுர்வேத பற்பொடி** – தேர்ந்தெடுக்கப்பட்ட மூலிகைகளிலிருந்து தயாரிக்கப் படுகிறது. வலிமையான பற்கள், ஆரோக்கியமான ஈறுகளைத் தருகிறது. வாய் நாற்றத்தை போக்குகிறது.

**நீலி பிருங்காதி தைலம்** – (கூந்தல் எண்ணெய்) - இள நரையையும் முடி உதிர்வதையும் தடுக்கிறது.



### ஆரோக்கிய டானிக்குகள்

**குல்கந்து** – சிறந்த மலமிளக்கி. புதிய ரோஜாப் பூக்கள், சர்க்கரை, தேன் ஆகியவை களைக் கொண்டு தயாரிக்கப் படுகிறது. கர்ப்பிணிகளுக்குச் சிறந்தது.

**அஸ்வகந்தா லேகியம்** – இரத்த சோகையைத் தடுக்கிறது. ரத்தத்தை சுத்தி செய்கிறது. உடலைத் தேற்றுகிறது.

**சௌபாக்கிய சுண்டி** – சிறந்த ஜீரண மருந்து. பிரசவத்திற்குப் பின் பயன்படுத்த மிக சிறந்தது.

**கருணை லேகியம்** – மூலத்தை தடுக்கிறது.

**தேத்தாங் கொட்டை லேகியம்** – நோயால் பாதிக்கப் பட்டவர்கள் உடல் தேற சிறந்த டானிக்.

**ரோஜாமொக்கு லேகியம்** – இரைப்பை புண்ணை ஆற்றுகிறது.

**கூஷ்மாண்ட லேகியம்** – பசியைத் தூண்டி ஜீரண சக்தியை அதிகரிக்கிறது ப்ரைமரி காம்ப்ளெக்ஸ் நோயைப் போக்கவும் பயன்படுகிறது.



**ஊட்டச் சத்து நிறைந்த புதிய சக்தி மால்ட் 4 வாசனைகளில் கிடைக்கிறது.**

**சமையல் பொடிகளும் தயார் செய்யப்படுகின்றன.**

காந்தி கிராமம் காந்தியின் லட்சியங்களின் வழியில் இயங்கி வருகிறது.




லெட்சுமி சேவா சங்கம்
காந்தி கிராமம் 624 302
மதுரை மாவட்டம் (தமிழ்நாடு)

**கிடைக்குமிடம் : காந்தி கிராம அங்காடிகள் (ஷோரூம்)**
(காந்தி கிராமம், மதுரை, திண்டுக்கல், வாடிப்பட்டி, கொடை ரோடு, பழநி, திருநெல்வேலி, பள்ளப்பட்டி, அம்பாசமுத்திரம்) காதி கிராமோதயோக பவன்கள், சர்வோதய சங்கங்கள், எல்லா (டிரக்கிஸ்ட் & கெமிஸ்ட்) பிரபல மருந்து கடைகளிலும் கிடைக்கும்.

*இவைகளைத் தவிர சித்த, ஆயுர்வேத மருந்துகள் 250க்கும் மேற்பட்டவைகள் தயாராகிறது.*

maa(s) 8325 TAM



# சபரிமலை சென்ற போது...

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

**போட்டி: 33**

நீங்களோ அல்லது உங்கள் நண்பரோ சபரிமலை யாத்திரை மேற்கொள்ள விரதமிருந்தபோதோ, அல்லது மலை ஏறும்போதோ, இறங்கும்போதோ, மெய்சிலிர்க்க வைத்த, பக்தி பரவசத்தில் ஆழ்த்திய, புனித அனுபவம் ஏதேனும் உண்டா? (கருத்து: த. சத்திய நாராயணன், அயன்புரம்) கீழே வெற்றிடத்தில் அதனை எழுதி இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் வி.ஐ.பி. ஸூட்கேஸ். உறையின் மேல் "சபரிமலை சென்ற போது......" என்று அவசியம் குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 30.12.85**

**இன்னும் 20 விலையுயர்ந்த வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுகள் காத்திருக்கின்றன. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கேற்று ஒன்றையேனும் தட்டிச் செல்ல முயற்சி செய்யுங்கள்.**

என் பெயர்: ..........................................................

விலாசம்: ..........................................................

..........................................................

"போடி! உள்ள! எந்தசாமி புண்ணியமோ! ஒரு லாரிக்காரன் இரக்கப்பட்டு, என்னை ஏத்திக் கொண்டாந்து, வீட்டு கிட்ட விட்டுட்டுப் போறான். இல்லேன்னா, இந் நேரம் என்ன ஆகியிருக்கும்! காலையில நான் வீட்டுக்குள்ள, நுழையறதுக்கு முன்னாலேயே சேதி முச்சந்திக்கு வந்திருக்கும்! நான் அப்படியே ஓடிப் போய் தண்டவாளத்துல தலையக் குடுத்திருப்பேன்! இல்லேன்னா, இங்க வந்து தூக்குல தொங்கியிருப்பேன்! தூ! மூத்தக் கழுதை. புத்திப் போன போக்கைப் பாரு. இந்தக் கழுதை இன்னைக்கு ஓடுவா! அந்த ரெண்டு கழுதைங்களும் நாளைக்கு ஓடுவாளுங்க! இதோ பாரு மௌலி! அந்தப் பய மறுபடியும் இந்த வீட்டுப் பக்கம் வந்தான்..... இப்போ, அவன் காலைத்தான் ஒடச்சிட்டு வந்திருக்கேன்! அப்புறம், அவன் கொடலையே உருவிடுவேன்! ஜாக்கிரதை! என்னடி நீ! ஒடு காலிக் கழுதை இங்க நின்னுகிட்டிருக்கா! நீ என்னையே அப்பே புடுச்சி முறச்சி, முறச்சிப் பார்த்துக்கிட்டிருக்கியே, என்ன....?"

இந்த மனுஷன் என்னைப் பார்த்து ஒரு முறை முறைக்கவும், எனக்கு அனையத் திறந்து விட்ட மாதிரி ஆயிடிச்சி!

"ஓடுகாலிக்களுதையப் பிடிச்சி இழுத்திட்டு வந்திட்டீங்கல்லே! உங்க அப்பன், பாட்டன், பூட்டன் எல்லாரும் மூட்டை, மூட்டையா தேடி வச்ச கௌரவத்தைக் காப்பாத்திட்டீங்கல்லே! அப்புறமென்ன! ரொம்ப சந்தோஷம்தான்! நாளைக்கே இவளுக்கு நாப்பது பவுன் நகையப் போட்டு, சீர் சினத்தியோட நல்ல ஒரு கலெக்டர் மாப்பிள்ளையா பாத்து கட்டிக் குடுத்திருங்க! போங்க! போயி.... படுங்க! வளவளன்னு பேசிகிட்டு நிக்காம! ஓடுறாளாம்! ரொம்ப லட்சணமா? தரித்திரம் பிடிச்சக களுதைங்க. இதுங்களுக்கு எங்க விடியப் போவுது!"

மறுபடியும் நான் பாய்ல வந்து விழுறேன்.

அந்த மனுஷன் பாயைத் தூக்கிக்கிட்டு திண்ணைப் பக்கம் போயிடுறாரு! மௌலி மட்டும் குத்துக் கல்லாட்டம் அப்படியே நின்னுகிட்டிருக்கா! கண்ணீர் மாலையா கொட்டிகிட்டிருக்கு!

"ஏண்டி! இன்னும் நின்னுகிட்டு? கதவச் சாத்திட்டு வந்து படுத்துத் தொலை!"

"விளக்கு!"

"ஆமா! இந்த வீட்டுக்கு, விளக்கு ஒண்ணு தான் குறைச்சல்! அதையும், ஊதித் தூக்கி எறிஞ்சிட்டு வா!"

மௌலி கதவைச் சாத்தி, விளக்கை ஊதிவிட்டு வந்து படுத்துக்குறா!

என் மனசு அப்படியே பொங்கிகிட்டு வருது! நான் மறுபடியும் விட்டத்தப் பாக்குறேன். அந்தக் கருப்பு மேகங்கிட்டேயிருந்து தப்பிச்ச நிலா, மறுபடியும் அந்த மேகங்க கிட்ட சிக்கி, வானத்த இருட்டாக்கி, என் வீட்டையும் அட்டை கரியாக்கிடுது. அந்த வானத்துக்கு இன்னும் கொஞ்ச நேரத்தில வெளிச்சம் கிடைச்சிடும்! ஆனா.... இந்த வீட்டுக்கு? என் மௌலிக்கு?

அவன் கையில் ஒரு சிறிய பையுடன் ஆஸ்பத்திரி வாசலில் நின்றான். அவள் தோளில் குழந்தைச் சுமையுடன் உடன் நின்றாள். பஸ்ஸை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். பஸ் வந்து, பயணம் செய்து, ஊருக்குள் இறங்கும்போது பலபலவென்று விடிந்திருக்கும்.

பஸ் வந்தது.

இது ஊருக்குப் போகும் முதல் பஸ்.

கருக்கலில் கிளம்பி விடியலில் அவன் ஊரைக் கடக்கும்.

உள்ளே ஏறினார்கள்.

பஸ்ஸில் அதிகக் கூட்டமில்லை.

கடைசி சீட்டுக்கு முன்னாலிருந்த பெண்கள் சீட்டில் ஜன்னலோரமாக அவளும் பக்கத்தில் அவனும் உட்கார்ந்தார்கள்.

அவர்களைத் தவிர யாரோ ஒருவர் அந்த ஸ்டாப்பில் ஏறி முன்னால் போய் உட்கார்ந்தார்.

கண்டக்டர் விசிலடித்தார்.

பஸ் நகர்ந்தது.

''டிக்கெட்.''




''ரெண்டு உத்திரமேரூர்.''

''குழந்தைக்கு என்ன வயசாகுது?''

''ரெண்டரை.''

சற்றுச் சந்தேகத்துடன் குழந்தையைப் பார்த்துவிட்டுப் பணத்தை வாங்கினார்.

டிக்கெட் கொடுத்தார்.

நகர்ந்தார்.

''முன்னால போய் உட்கார்ந்தது யாருப்பா?''

பஸ்ஸில் அதிகக் கூட்டமில்லை. எண்ணினால் இருபதுக்குள் வருவார்கள்.

ஊர் போக இன்னும் அரை மணி நேரம். அதுவரை சமாளிக்க வேண்டுமே!

காலைக் குளிரைக் காற்றில் வாங்கிக் கொண்டு பஸ் பறந்து கொண்டிருந்தது. புக்கத்துரை கூட்ரோடில் திரும்பி நகர்ந்தது.

இதுவரை சரளமாய்ப் போன மாதிரி இல்லாமல் பாதையின் மேடும் பள்ளமுமான அமைப்பு பஸ்ஸைச் சோதித்தது. ஒரு பள்ளத்தில் இறங்கி நிமிர்ந்ததில் பஸ்ஸின் பின்புறத்தைத் தூக்கி அடித்தது. அவள் கையிலிருந்த குழந்தையின் தலை ஜன்னலில் அடிபட்டது.

அவள் சுபாவமாக அதன் தலையைத் தடவிக் கொடுத்தாள்.

முன்புறத்தில் டிக்கெட் கொடுத்துவிட்டு, அங்கேயே உட்கார்ந்திருந்த கண்டக்டர் கத்தினார், ''என்னம்மா, பின்னால போய் உட்கார்ந்து குழந்தையை இடிபட வைக்கறீங்களே, கூட்டம்தான் இல்லையே, முன்னால வந்து உட்கார்றதுதானே!''

''பரவாயில்லை சார். இனிமே இடிபடாம பார்த்துக்கறோம்''.

''என்னத்தப், பார்த்துக்குவீங்க? இன்னும் எத்தனை வருஷம் ஆனாலும் திருந்த மாட்டீங்க'' என்று அலுத்துக் கொண்டார்.

அதற்காக அவர்கள் வருத்தப்படவில்லை. எதிர்வினை செய்யவில்லை.

பஸ் சீறிச் செல்லக் காற்றும் காலமும் எதிர்த்திசையில் ஓடின.

அவன், ''ரொம்பக் குளிர் காத்து அடிக்குது'' என்றான்.

அவள் அவனை உற்றுப் பார்த்தாள். அது வறண்ட பார்வை. பின் அவள் மெல்ல குழந்தையைப் போர்த்திக் கொண்டாள்.

காலைநேரப் பயணமாதலால் வண்டி வழிகள்தோறும் நிறுத்தப்படவில்லை. ஒரே ஒரு இடத்தில் பால் கேன்களை ஏற்றினார்கள்.

மீண்டும் பஸ் ஓடி நின்றது.

''உத்திரமேரூர்.''

அவர்கள் இறங்கினார்கள்.

இரண்டு எட்டு எடுத்து வைத்ததும் முருகேச மாமா எதிர்ப்பட்டார்.

''என்னடா குழந்தைக்கு சொஸ்தமாயிடுச்சா?''

''இல்லை.''

''அப்படின்னா...... அடப்பாவி, அழாம சொல்றியேடா! அவசரப்பட்டு குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் வேற பண்ணிக்கிட்டியே!''

''என்ன பண்ணறது.... ஆரம்பத்திலேயே பணம் இருந்திருந்தா குழந்தையை காப்பாத்தியிருக்கலாம். இல்லே, இப்பவாவது பணம் இருந்திருந்தா கார்ல பிணத்தைப் போட்டு வழி நெடுக அழுதுக்கினு வந்திருக்கலாம். இப்பவும் இல்லே. ஏழைக்குச் சிரிக்கிறதுக்கு மட்டுமில்லே மாமா, அழுறதுக்கும் உரிமை இல்லே.''

அவர் அழுதார்.

—எஸ். குமார்



ராஜீவ் சென்னை வருவது எதற்காக?

# உலகமே வியக்கும் விஞ்ஞான சாதனை!

"**ரா**ஜீவ் காந்தி சென்னைக்கு வருகிறாரே எதற்காக?"

"கல்பாக்கம் அணு மின் நிலையத்துக்கு விஜயம் செய்யப் போகிறார். ஜியாவைக் கூட அழைத்தார். ஆனால் அணுகுண்டு அது இது என்று பேசிவிட்டு, "நீங்களே வந்து பார்த்துக் கொள்ளுங்கள்" என்பது போல் அழைத்தால் ஜியா ஒப்புக் கொள்வாரா? அப்புறம் அவருடைய கிதாப் என்ன ஆவது? அந்தத் தேதி வசதிப்படாது என்று கூறி விட்டார்."

"போகட்டும். ராஜீவ் வந்து கல்பாக்கத்தில் என்ன செய்யப் போகிறார்?"

"இந்திரா காந்தி அணு ஆய்வுக் கேந்திரம் என்று பெயர் மாற்றம் செய்யப் போகிறார்."

"பூ! இதற்காகப் பிரதமர் வர வேண்டுமா என்ன? இந்தப் பெயர் மாற்றும் விஷயத்தில் நமது மாண்புமிகுக்கள் நிபுணர்களாயிற்றே. அவர்களிடம் ஜாடை காட்டினாலே போதுமே. ஜமாய்த்து விடுவார்களே!"

"செய்வார்கள்; ஆனால் தாயின் நினைவைப் போற்றும் விஷயத்துக்கு மகன் வருவது பொருத்தம் என்பது ஒன்று. மற்றொரு காரணம் இங்குள்ள விஞ்ஞானிகளை நேரில் சந்தித்துத் தட்டிக் கொடுக்க வேண்டும் என்பது."

"அட! பிரதமரே வந்து தட்டிக் கொடுக்க வேண்டுமா?"

"பிரதமரைவிட முக்கியமானவராக நாட்டில் வேறு ஒருவர் இல்லை. இருந்தால் அவரே கூட வரலாம்! அந்த அளவுக்கு இங்கே சாதனை நடந்திருக்கிறது."

"அப்படி என்ன சாதித்துவிட்டார்கள்?"

"சொல்கிறேன். எந்தப் பொருளையும் பகுத்துக் கொண்டே போனால் கடைசியில் கிடைப்பது அணு என்பது உங்களுக்குத் தெரியும்."

"அந்த அணுவுக்குள்ளேயும் கடவுள் இருப்பதாகக் கம்பன் பாடினான்!"

"இறைவனை இழுத்தால் சிலருக்குப் பிடிக்காது; இயற்கை என்றும் கூறலாம். சூரியனைச் சுற்றி பல கிரகங்கள் குறிப்பிட்ட பாதையில் ஒரு நியதிப்படி சுற்றி வருவது போல ஒவ்வொரு அணுவுக்குள்ளும் ஒரு நியதிப்படி நியூக்ளியஸைச் சுற்றி எலெக்ட்ரான்கள் குறிப்பிட்ட சக்தி மட்டங்களில் சுற்றி வருகின்றன. அணுவைப் பிளக்கும்போது ஏதோ அண்ட சராசரத்தின் இயக்கத்திலேயே நாம் கைவைத்துவிட்டது போல அந்த அணுவுக்குக் கோபம் வருகிறது. அந்தக் கோபம் உஷ்ணமாக வெளிப்படுகிறது."

"பகவான் நெற்றிக் கண்ணைத் திறப்பது போல.....!"

"கடவுள் புராணத்தை விடமாட்டீரே!



சரி, அந்த உஷ்ணத்தைக் கட்டுப்படுத்தி, அதைக் கொண்டு நீராவி தயாரித்து, அந்த நீராவியின் அழுத்தத்தில் ஜெனரேட்டர்களை இயங்கச் செய்து மின்சாரம் தயாரிக்கலாம்."

"இதைத்தான் கல்பாக்கம் ஏற்கெனவே செய்து வருகிறதே. தமிழக மின் வாரியத்துக்கு மின் உற்பத்தி செய்து கொடுத்து வருகிறதே!"

"அவசரப்படாதீர்கள்! கல்பாக்கத்தில் மின் உற்பத்தி நிலையமும் உண்டு. ஆய்வுக் கேந்திரமும் உண்டு."

"ஓஹோ! ஆய்வுக் கேந்திரத்தில் பிரதமரே வந்து பாராட்ட வேண்டிய அளவில் என்னமோ நடந்திருக்கிறது என்கிறீரா?"

"என்னமோ என்றால் போதுமா? என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டாமா?"

"அறுப்பீரா?"

"இது உரித்த வாழைப்பழம். இதைக்கூட விழுங்க உம்மால் முடியவில்லையானால் உமது அபார மூளையைப் பரிசோதிக்க டாக்டர் பி. ராமமூர்த்தி ஓடி வருவார்!"

"சரி சொல்லும், கேட்போம்."

"ஏற்கெனவே நியூக்ளியஸ் என்று சென்னேனில்லையா? அந்த நியூகிளியஸுக்குள்ளே நியூட்ரான், ப்ரோட்டான் என்ற பிரிவுகள் உண்டு. இவற்றில் நியூட்ரானுக்கு உள்ள அபார சக்தி என்னவென்றால் ஒரு யுரேனியம் அணுவை ஒரு நியூட்ரான் தாக்கி உட்புகுந்து பிளக்கச் செய்கிறது. இரண்டாகப் பிரிந்த பகுதிகள் கதிரியக்கம் உடையவை. கூடவே சக்தியானது உஷ்ணமாக வெளிப்படுகிறது. தவிர இரண்டு அல்லது மூன்று புதிய சக்தி மிக்க நியூட்ரான்கள் கிளம்புகின்றன. இந்த நியூட்ரான்கள் மேலும் இரண்டு மூன்று யுரேனியம் அணுக்களைத் தாக்கி, பிளக்கச் செய்து உஷ்ணத்தையும், கதிரியக்கத்தையும் ஏற்படுத்தி, மேலும் புதிய நியூட்ரான்களைத் தோற்றுவித்து, அந்த நியூட்ரான்கள் மேலும் அணுக்களைத் தாக்கி..... இதனை சங்கிலித் தொடர் இயக்கம் என்கிறார்கள். தொடர்ந்து சக்தியும் வெளிப்படுகிறது. இதற்கு பயனாகும் யுரேனியத்தை யுரேனியம்—235 என்கிறார்கள்."

"அப்படியானால் வேறுவகை யுரேனியமும் இருக்கிறதா?"

"உண்டு. இயற்கையில் கிடைக்கும் யுரேனியத்தில் 0·7 சதம்தான் யுரேனியம்—235 உள்ளது. மற்ற பகுதியை யுரேனியம்—238 என்கின்றனர். யுரேனியம்—238 பகுதி, கதிரியக்கம் காரணமாக புளூடோனியம் என்ற கனிமமாக மாறுகிறது. இந்த புளூடோனியம் இயற்கையில் கிடைக்காத ஒரு கனிமம். தவிர இயற்கையில் நிறையக் கிடைக்கும் தோரியம் என்ற கனிமத்தை யுரேனியம்—233 என்ற கனிமமாக மாற்றமுடியும். இந்த யுரேனியம்—233ம் இயற்கையில் கிடைப்பதில்லை. ஆனால் இந்த யுரேனியம்—233, புளூடோனியம் ஆகிய செயற்கைக் கனிமங்களின் அணுக்களைப் பிளந்து சங்கிலித் தொடர் இயக்கத்தை உருவாக்கி அதன் மூலம் அபரிமித சக்தியைப் பெறலாம்."

"ஓஹோ, சரிதான். இதில் கல்பாக்கம் விஞ்ஞானிகளின் பங்கு என்ன?"

அதைத்தானே சொல்ல வருகிறேன். இந்தப் புளூடோனியத்தையும் இயற்கை யுரேனியத்தையும் எந்த விகிதாசாரத்தில் சேர்த்துப் பயன்படுத்தினால் நல்ல பலன் கிடைக்கும் என்பதைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவற்றை ஆக்ஸைடாகப் பயன்படுத்துவதைவிட கார்பைடாகப் பயன்படுத்துவது சிறப்பான பலன் தரும் என்பதைக் கண்டறிந்திருக்கிறார்கள். இந்தக் கலவையை எரிபொருளாகப் பயன்படுத்தி அணு உலைக்களத்தில் அணு சிதைக்கப்படும்போது

வெளிப்படும் அபரிதமான உஷ்ணத்தை ஏற்றுக் கொள்ளத் தண்ணீரை நேரடியாகப் பயன்படுத்த முடியாது. முதலில் திரவ ஸோடியத்தை உபயோகிக்கிறார்கள். இது கலபத்தில் கொதித்துவிடாது. திரவ ஸோடியம் ஏற்றுக் கொள்ளும் உஷ்ணத்தைத் தண்ணீர் மறுபடி ஏற்றுக் கொண்டு நீராவியாகிறது. நீராவி மிகுந்த அழுத்தத்தில் பாய்ந்து மின் உற்பத்தி செய்யும் டர்பைனை இயக்குகிறது."

"ஏற்கெனவே அணு மின் நிலையத்தில் பயன்படும் யுரேனியம் எரிபொருளைக் காட்டிலும் இந்தப் புதிய கலவை எரி பொருள் எந்த விதத்தில் சிறந்தது?"

"சரியான கேள்வி! யுரேனியத்தை மட்டும் நம்பி நாம் காரியம் செய்ய முடியாது. ஏனென்றால் நம் நாட்டில் யுரேனியக் கனிமம் மிகக் குறைவு. வெகு சீக்கிரம் தீர்ந்து போகும். மேல் நாடுகளை நம்பி இருந்தால் திடீர் திடீரென்று அவற்றுக்கு அணுகுண்டு பயம் வந்து சப்ளையை நிறுத்திவிடுவார்கள். ஆனால் ஏற்கெனவே நான் சொன்னது போல யுரேனியம் பயன்படுத்தும் அணு உலையில் (ரியாக்டர்) உப பொருளாக புளூடோனியம் உருவாகிறது. அந்தப் புளூடோனியத்தை மறுபடி பயன்படுத்தும் போது நாட்டில் உள்ள யுரேனியக் கனிமம் இன்னும் அதிக காலத்துக்கு நீடித்து வரும். இது இரண்டாவது கட்ட வெற்றி. இந்த வெற்றியைத்தான் இன்று கொண்டாடுகிறோம். கட சீக்கிரத்தில் மூன்றாவது கட்ட வெற்றியாக தோரியத்தை, யுரேனியம்—233 ஆக மாற்றிப் பயன்படுத்துகிற சாத்தியக் கூறுகளும் இப்போது இந்த இரண்டாவது கட்ட வெற்றி காரணமாக அதிகரித்து விட்டன. தோரியம் நமது நாட்டில் ஏராளமாக இருக்கிறது. இன்னும் ஆயிரம் ஆண்டுகளுக்குக் கவலையே இல்லை!"

"நிஜமாகவே இந்த இரண்டாவது கட்ட வெற்றியை நமது விஞ்ஞானிகளே சாதித்து விட்டார்கள் என்று சொல்கிறீர்கள்?"

"ஆமாம் ஐயா, ஆமாம்! இப்படி இப்படி செய்யலாம் என்ற அடிப்படைத் தத்துவம் ஏற்கெனவே தெரிந்த ஒன்றுதான். ஆனால் ஆக்ஸைட் நல்லதா கார்பைட் நல்லதா? எந்த விகிதாசாரத்தில் கலவை அமைய வேண்டும் என்பது போன்ற விஷயங்களை மேல் நாட்டினர் பரம ரகசியமாக வைத்திருப்பார்கள். வெளியே சொல்லவே மாட்டார்கள். காரணம், அணுகுண்டு தயாரித்து விடுகிற ஆபத்தும் இருக்கிறதல்லவா?"

"சரிதான், புரிகிறது. அதனால்தான் இன்று உலகமே இந்திய அணுசக்தி விஞ்ஞானிகளின் ஆய்வுத்திறமை கண்டு வியப்படைந்து நிமிர்ந்து உட்கார்ந்திருக்கிறதாக்கும்!"

"கரெக்ட்! இவர்கள் எங்கே சாதிக்கப் போகிறார்கள் என்ற அலட்சியம், அட, செய்து காட்டிவிட்டார்களே என்ற ஆச்சர்யமாய் உருமாறிவிட்டிருக்கிறது! இதற்குத் தேவையான உபகரணங்கள், கட்டுமானங்கள் ஆகியவற்றின் (டிசைன்களை) வரைபடங்களை பிரான்ஸ் நாட்டிடம் கேட்டுப் பெற்றுக் கொண்டார்கள். ஆனால் அந்த



* ராமண்ணா.



* எஸ். வி. சுந்தரம்.

(Pool Type Reactor)





டிசைன்கள்படி அனைத்தையும் இவர்களே தான் இங்கே உருவாக்கியிருக்கிறார்கள்.''

''பேஷ்! ஆனால் நான் நெஞ்சை உயர்த்திப் பெருமைப்பட முடியாதபடிக்குக் கதிரியக்க ஆபத்து பற்றி ரொம்பப் பயமுறுத்துகிறார்களே!''

''இதை நானும் கேட்டேன், கல்பாக்கம் போயிருந்தபோது. அவர்கள் என்ன பதில் கேள்வி போடுகிறார்கள் தெரியுமா? எந்தக் காரியத்தில்தான் ஆபத்து இல்லை என்று வினவுகிறார்கள். சென்னை போன்ற பெரிய நகரங்களில் குடிநீரும் சாக்கடை நீரும் அருகருகேதான் பூமிக்கடியில் குழாய்களில் பாய்கின்றன. ஒரு சிறு கசிவு ஏற்பட்டால் குடிநீர் கெட்டுப் போய் பயங்கரமான மஞ்சள் காமாலை பரவும் ஆபத்து இருக்கவே இருக்கிறது. அதுபோல இதிலும் ஆபத்து உள்ளடங்கி இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது வெளிப்படாதிருக்க, கதிரியக்கம் சற்றும் பரவாதிருக்க எல்லாவிதப் பாதுகாப்பு விதிகளையும் கடைப்பிடிக்கிறோம். சதா சர்வகாலமும் சோதனைகள் நடத்துகிறோம். சுற்று வட்டாரத்தில் ஜனசஞ்சாரம் இல்லாமல் பார்த்துக் கொள்கிறோம். தப்பித் தவறி எங்காவது எதிலாவது சிறு கசிவு ஏற்பட்டாலும் அதை அறிவிக்கவும் தடுப்பு நடவடிக்கையை உடனே மேற்கொள்ளவும் தானியங்கு அமைப்புக்கள் உள்ளன. பாதுகாப்பைக் கவனிக்கவென்றே ஒரு நிபுணர் குழு தனித்து இயங்குகிறது என்றெல்லாம் விளக்குகிறார்கள்.''

''அப்படியானால் நீ கல்பாக்கத்துக்கே போயிருந்தாய் என்று சொல்லு! ஸ்பெஷல் பாஸ், ஸ்பெஷல் பாட்ஜ் எல்லாம் இல்லாமல் அங்கே நுழைய முடியாதாமே?''

''ஆமாம். பாதுகாப்பு ஏற்பாடு தவிரக் காவல் ஏற்பாடுகளும் பலம்தான். ஆனால் வந்தியத்தேவன் இலச்சினை காட்டி கோட்டைக்குள், 'புராண்மனைக்குள்ளெல்லாம் நுழையவில்லையா. அப்படி இயக்குனர் ஜி. வி. சுந்தரம் அனுப்பித் தந்த கடிதம் உதவியது. அவரிடமே கைகுலுக்கிப் பேசிவிட்டு வந்திருக்கிறேன்.''

''சுந்தரம் — அழகான பெயராய் இருக்கிறதே!''

''அவர் பிறந்து வளர்ந்தது பாலக்காடு. படித்துப் பட்டம் பெற்றது சென்னையில். உயர் கல்வி பெங்களூரில், இந்திய விஞ்ஞானக் கழகத்தில். வாங்கியுள்ள விருதுகள் அரை கி. மீ. நீளம். எழுதிப் படித்துள்ள ஆய்வுக் கட்டுரைகள் பத்து கிலோ தேறும். இத்தனைக்கும் மஹானுபாவன் பசு.''



* வெற்றிக் களிப்பு.

"நினைவுக்கு வருகிறது. இந்த இரண்டாவது கட்ட வெற்றித் தருணத்தில் ஃபோட்டோவுக்குக் கூட நிற்காமல் ஒதுங்கியவரை இந்திய அணுத்துறைத் தலைவர் ராமண்ணாவை இழுத்துப் பிடித்து நிறுத்த வேண்டியிருந்ததே!"

"அவர் மனசும் சுந்தரமாக இருப்பதுதான் காரணம். இது ஒரு கூட்டு முயற்சி, தனக்கு மட்டும் உரிய பெருமையல்ல என்று எண்ணுகிறார். அனைத்து இந்தியாவிலும் பரவலாக உள்ள பல விஞ்ஞானிகள் பல பொறி இயல் நிபுணர்கள் இருபதுக்கு மேற்பட்ட தொழிலகங்களின் ஒத்துழைப்பு எல்லாமாகச் சேர்ந்துதான் இதைச் சாதித்திருக்கிறது."

"கல்பாக்கம் அணுமின் நிலையமும் ஆய்வுக் கூடமும் எப்படி இருக்கிறது?"

"மாமல்லபுரம் தாண்டிப் பரந்த கடலோரப் பகுதி. ஏகப்பட்ட ஏக்கர். அவுட்டோருக்கு ஏற்ற சூழ்ல். பத்து எக்ஸ்ட்ராக்களையும் சிலுக்கையும் கொடுத்தால் சரோஜா சக்கையாகப் பிழிந்தெடுத்து விடுவார், மணல் மேடுகளிலும் சமுத்திரக் கரையோரத்திலும்."

"அணு ஆய்வுக் கேந்திரத்தை வர்ணிப்பதென்றாலும் உனக்கு சினிமா பாஷைதான் கைகொடுக்குமாக்கும்! கட்டிடங்களையெல்லாம் விட்டலாச்சார்யா ஸெட் என்பாய்!"

"மந்திரம் போட்டால் திறக்கும் கனத்த மர்மக் கதவுகள், அதள பாதாள குகை அமைப்புக்கள், இறங்கிப் போனால் அரண்மனை போன்ற கூடம்... இதோ வில்லன் வரப் போகிறார் என்று நினைக்கும் போது விஞ்ஞானிதான் வருகிறார்!"

"இன்னொரு வித்தியாசம், சினிமா ஸெட்டெல்லாம் ஷூட்டிங் முடிந்ததும் கலைக்கப்படும். அத்தனையும் பிளைவுட். கல்பாக்கத்தில் எல்லாம் கனமான எஃகு கான்கிரீட்டாக இருந்திருக்கும்!"

"பின்னே, கதிரியக்க சமாச்சாரங்களை ஹவுஸிங் போர்டுக் கட்டிடத்திலா குடியேற்ற முடியும்? காவல் ஏற்பாடுகளின் ஓர் அம்சமாக ஒளிந்திருந்து கண்காணிக்கும் டெலிவிஷன் வேறு! சுற்றிலும் இரட்டை வேலி. அவற்றுக்கிடையில் யாராவது புகுந்தால் ஆள் காலி!"

"தேவைதான்! அணு விஷயத்தில் நமது முன்னேற்றத்தை அறிந்து கொள்ள அமெரிக்காவின் சி. ஐ. ஏ. முதல் பாகிஸ்தான் உளவாளி வரை பலருக்கு ஆசையிருக்குமே! மாற்று

னுக்கு ரகசியங்களைப் பறி கொடுக்கவா மக்களின் வரிப்பணத்தை இதில் கொட்டியிருக்கிறார்கள்? எவ்வளவு விழுங்கியிருக்கிறதாம்? நஷ்டம் எவ்வளவு?''

''அதைக் கேட்காமல் விடுவேனா! தமிழகம் போன்ற மாநிலங்களில் இனி நதிகளுக்கு அணையிட்டுக் கட்டுப்படுத்தி நீர் மின் நிலையங்கள் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்கிற வாய்ப்பு மிகவும் குறைவு. நதி நீரை அதிகபட்சமாக மின் உற்பத்திக்கு நாம் பயன்படுத்தியாகிவிட்டது. நிலக்கரியைச் சுரங்கத்திலிருந்து வெட்டி எடுத்து நாட்டின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்குக் கொண்டு செல்ல ரயில் வேகன் கிடைக்காமல் அவதிப்படுவதும் அதற்காகும் செலவும், செலவு செய்து வந்து சேர்ந்தாலும் அதன் தரக்குறைவும் எல்லாம் நாம் அறிந்தவை. அதையெல்லாம் பார்க்க மிகக் குறைந்த அளவே தேவைப்படும் யுரேனியத்தைக் கொண்டு போவதும் எளிது; உற்பத்திச் செலவும் கம்மிதான். இன்னும் சில காலத்தில் நிலக்கரிச் சுரங்கத்துக்குப் பக்கத்திலேயே கூட அணுவுலைக் கூடம் அமைத்து மின் உற்பத்தி செய்வதுதான் லாபகரமாக இருக்குமாம்! ஆனால் ஒன்று. 'அணு ஆராய்ச்சிக்குச் செலவாகும் பணத்தை இதில் சேர்த்துக் கணக்குப் போடக் கூடாது' என்கிறார் சுந்தரம். 'அது நீண்ட கால நோக்கில் நாட்டின் பல்வேறு பகுதிகளில் அணுமின் நிலையங்கள் உருவாக உதவப்போவதால், ஆய்வுப் பணிக்கான செலவுகளை நிரந்தரச் செல்வமாகக் கருத வேண்டும்' என்கிறார்!''

''இதை ஜீரணிப்பது கொஞ்சம் கஷ்டம் தான். ஆனாலும் நமது வரிப்பணத்தில் இத்தனை விஞ்ஞான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறதே என்று ஒரு பக்கம் பெருமையாகத் தான் இருக்கிறது... மின்வாரியம் வாங்கிக் கொள்கிற மின்சாரத்துக்கு ஒழுங்காகப் பணம் கொடுத்து விடுகிறதா அல்லது பாக்கி வைத்திருக்கிறதா?''

'''டாண், டாண்'ணென்று பில் அனுப்பியதும் காசோலை வந்து விடுகிறதாம்! புள்ளி விவரங்களைக் காட்டி நிரூபித்தார்கள்.''

''தண்ணீர் தட்டுப்பாடு ஒன்றும் இல்லையாமா?''

''பாலாற்றிலிருந்து படுகை நீர் வருகிறது. பிரும்மாண்ட செயற்கை ஏரியில் தேக்கியிருக்கிறார்கள். டர்பைனை இயக்கும் நீராவியைக் குளிர்வித்து அதனை மீண்டும் தண்ணீராக்கக் கடல்நீர் பயன்படுத்தப்படுகிறது. இந்தக் கடல் நீருடன் மணலும் அடித்துக் கொண்டுவரக்கூடாதுஎன்பதற்காகப்பெரிய ராட்சத (டன்னல்) சுரங்கப் பாதையை க் கடலின் அடிவாரத்துக்கும் கீழே அமைத்துள்ளார்கள்!''

''எங்கே இன்னொரு தடவை சொல்லு! இவை எல்லாமே நம் நாட்டு விஞ்ஞானிகள், பொறி -இயல் நிபுணர்களின் சாதனை தானா?''

''ஆமாம் சுவாமி, **Be Indian, Buy Indian.** மின் உற்பத்தி டர்பைன்கள், கம்ப்யூட்டர்கள், ராட்சத பளுதூக்கிகள், ரியாக்டர் கலன், அசெம்ளிகள், குழாய்கள், வெப்ப எக்ஸ்சேஞ்சர்கள் எல்லாம் சுதேசிதான்! எலக்ட்ரானிக்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா, பி. எச். இ. எல். இவற்றை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். நான் போயிருந்த போது, பி. எச். இ. எல். அனுப்பி வைத்த ஒரே ஒரு ருஷ்ய இன்ஜினியர் மட்டுமே வெள்ளைத்தோல் படைத்தவராகக் காணப்பட்டார். ஒரு ராட்சத டர்பைனைச் சரிபார்த்துக் கொண்டிருந்தார். அதன் மோட்டார் பகுதி அமெரிக்க டிசைனும், டர்பைன் பகுதி ருஷ்ய டிசைனும். அடிக்கடி இல்லாவிடினும் அவ்வப்போது தகராறு வராமல் இருக்குமா?''

''தகராறு இங்கேயும்தான் இருக்கிறது. தெறக்டேயும், என். டி. ஆரும் கல்பாக்கம் மின்சாரம் எங்களுக்கும் வேண்டும் என்று பங்கு கேட்கிறார்களே!''

''உண்மையில் அவர்களுக்கு இப்போது மின்சாரம் தேவையில்லை. ஆனாலும் நாளை பற்றாக்குறை ஏற்பட்டால்? அதற்காக இப்போதே விண்ணப்பம் போட்டு வைக்கிறார்கள். மத்திய அரசு நிறுவனமில்லையா இது? அதனால் பங்கு கேட்கிறார்கள். மத்திய அரசும் இன்னின்னாருக்கு இவ்வளவு என்று பங்கு போட்டு விட்டது.''

''கதிரியக்கம் உள்ள கழிவுப் பொருள்களை என்ன செய்யப் போகிறார்கள்?''

''அது பெரிய தலைவேதனை சுவாமி! அமெரிக்கா, ஜெர்மனி போன்ற நாடுகள் கூட இன்னும் அந்தப் பிரச்னையை முழுமையாக வெற்றி கொண்டதாகத் தெரியவில்லை. கல்பாக்கத்தில் பலத்த பாதுகாப்புடன் ஒரு தண்ணீர்க் குட்டையில் இப்போதைக்கு வைத்திருக்கிறார்கள். 'எந்தவிதமான ஆபத்தும் கிடையாது' என்று தலைமேல் அடித்துச் சத்தியம் பண்ணுகிறார்கள். ரொம்ப ரொம்ப எச்சரிக்கையாக இருக்கிறார்களாம்.''

''அணுகுண்டு பண்ணலாம், மின் உற்பத்தி செய்யலாம் இவ்வளவுதானா?''

''இல்லை, இல்லை! கதிரியக்கத்தையே கட்டுப்படுத்தி விவசாயம், மருத்துவம் போன்ற துறைகளில் ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தலாம். அந்த ஆராய்ச்சிகளும் இந்தியாவில் நடக்கின்றன... சரி, எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டாய், கடைசியாக இப்ப என்ன சொல்கிறாய்?''

''சில நிமிஷங்களுக்கேனும் நம்மை அமுக்குகிற வேலையில்லாத் திண்டாட்டம், விலைவாசி உயர்வு போன்ற பலப்பல பிரச்னைகளை மறந்துவிட்டு, 'இந்திய விஞ்ஞானிகளே, சபாஷ்!' என்று சொல்கிறேன்; ராஜீவுக்கு 'ஜே' போடுகிறேன்; இந்திராவுக்கு அஞ்சலி செலுத்துகிறேன்! ஓகே!''

**— நமது நிருபர்கள்.**

புகைப்படங்கள்: **யோகா.**



# உங்கள் வாழ்க்கையில் எத்தனையோ பிரச்னைகள் இருக்கலாம்

"யாரிடம் எதைச் சொல்லி ஆறுதல் பெறுவது?" என்று தவித்துக் கொண்டிருக்கிறீர்களா?

பிரச்னைகளைத் தீர்ப்பதற்கும் ஆறுதல் அளிப்பதற்கும் ஜனரஞ்ஜனி உவகையுடன் முன் வருகிறது.

உங்கள் பிரச்னைகளில் இரண்டை மட்டும் இத்துடன் இருக்கும் 'கூப்பனுடன்' இணைத்து எங்களுக்கு அனுப்புங்கள். சக்திவாய்ந்த ஆவிகள் மூலமாக பதில் பெற்று ஜனரஞ்ஜனியில் பிரசுரிக்கிறோம். அரசியல், சினிமா, தனிநபர் விமர்சனம் ஆகியவற்றை அன்புடன் தவிர்க்கவும். முழு விபரங்களுக்கு ஜனரஞ்ஜனியைப் பார்க்கவும்.



விக்கிரவாண்டி
வி. ரவிச்சந்திரன்
தொகுத்து அளிக்கும்

உங்கள் கேள்விகளும்
ஆவிகள் பதிலும்

## ஜனரஞ்ஜனி

தமிழ் வார இதழ்



---

பெயர்: ______________________

முகவரி: ______________________

______________________

## ஆவி உலகம்

கேள்வி-பதில் பகுதி

அனுப்ப வேண்டிய முகவரி:

ஜனரஞ்ஜனி
188, N.H. ரோடு
கோயமுத்தூர்-641001

## ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் அப்பாவும் அத்தையும் எப்படி இருந்திருப்பார்கள்?



**இன்றும் அத்தோற்றத்தைப் பசுமையாக நினைவுகூர வைப்பது பிளாக் & ஒயிட் படங்களே!**

உங்கள் குடும்ப போட்டோ ஆல்பத்தைப் புரட்டிப் பாருங்கள்!

பல்லாண்டுகளுக்கு முன் எடுத்த பிளாக் & ஒயிட் படங்கள் இன்றும் கருக்கழியாமல், மங்காமல் இருப்பதைக் காண்பீர்!

அதுவே பிளாக் & ஒயிட் படங்களின் சிறப்பு! முப்பது, நாற்பது ஏன் ஐம்பது வருடங்களானாலும் மங்காது!

சொல்லவும் வேண்டுமோ?

காலத்தை வென்றிடும் பிளாக் & ஒயிட் படங்களே உங்களது தேர்வாக இருக்க முடியும்!

**அழியாத நினைவுகளுக்கு காலத்தால் அழியாத பிளாக் & ஒயிட் படங்கள்!**









**இந்து பிளாக் & ஒயிட் ரோல் பிலிம் மற்றும் ப்ரோமைடுகள்.**



# காங்கிரஸ் மந்திரிசபை ராஜினாமா!

உலக யுத்தம் மூண்டதையொட்டி இந்தியாவில் பல கேள்விகள் எழுந்தன. பிரிட்டிஷ் அரசுக்கும் காங்கிரஸுக்கும் இடையே இருந்த நல்லுறவு தொடருமா? மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபைகள் நீடிக்குமா? கலைக்கப்படுமா?

ஸி. ஆர். பத்திரிகை நிருபர்களிடம் கூறினார்: 'இந்தியாவின் அரசியல் எதிர்காலம் பற்றி காங்கிரஸ், பிரிட்டிஷ் அரசுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி வருகிறது. இதன் முடிவு திருப்திகரமாக இருக்கும் என்று நம்புகிறேன்.

லின்லித்கோவிடமிருந்து பேச்சு வார்த்தைகள் நடத்த அழைப்பு வந்தது. மகாத்மா, காங்கிரஸ் அக்கிராசனர் பிரசாத், நேரு, படேல் ஆகியோர் காங்கிரஸ் சார்பாகச் சென்றார்கள். தவிர ஜின்னா, சமஸ்தான மன்னர்கள், அம்பேத்கர் மற்றும் ஹிந்து மகா சபையினர் ஆகியோரும் அழைக்கப்பட்டிருந்தனர். இத்தனை பேருடனும் பேசுவது வைஸ்ராய்க்குக் கஷ்டமான காரியமாகத்தான் இருந்தது. அவர் தமது முடிவை உடனடியாகக் கூறாமல் ஒத்திப் போட்டார். வார்தாவில் கூடிய காங்கிரஸ்காரர்கள் தங்கள் தலைவர்கள் லின்லித்கோவிடம் கூறியதையே தீர்மானமாக நிறைவேற்றினார்கள்: யுத்தம் முடிந்ததும் சுதந்திரம் அளிப்பதாக இப்போதே அறிவித்துவிட வேண்டும்: அரசியல் சாசனத்தில் உடனடியாக மாறுதல்கள் செய்ய முடியாமல் போனாலும் சுதந்திரம் வழங்குவது என்ற கொள்கை இப்போதே இயன்ற அளவுக்கு அமுல்படுத்தப்பட வேண்டும்.

யுத்தத்துக்குப் பிறகு பூரண சுதந்திரம் தருவதாகச் சத்தியம் செய்து தர வேண்டும் என்ற நிபந்தனையில் அநீதி ஏதும் இருப்பதாக ஸி. ஆர். கருதவில்லை என்றாலும் பேச்சு வார்த்தைகளை அவர் பொறுப்பில் மட்டும் விட்டிருந்தால் அந்த நிபந்தனையை வற்புறுத்தி இருக்க மாட்டார். குறைந்த அளவினதானாலும் உடனடியாக அதிக அதிகாரங்களைப்

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — 11
ராஜ்மோகன் காந்தி

பெறுவதே முக்கியம் என்று அவர் கருதினார். ஆனால், அவர் மன்ரோவுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டது போல், காங்கிரஸின் அப்போதைய மனநிலையில் அதனுடைய பிடிவாதத்தைவிட்டுக்கொடுக்கும்படி வற்புறுத்துவது என்பது நடக்க முடியாத காரியமாக இருந்தது. அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானம் நிறைவேறிய பிறகு ஸி. ஆரும் வைஸ்ராயும் இரண்டு முறை சந்தித்தார்கள். பரஸ்பரம் மரியாதை காட்டிப் பேச்சு வார்த்தைகள் நடந்த போதிலும் தயக்கமோ, ஒளிவு மறைவோ இன்றி மனம் விட்டுப் பேசியதாகப் பின்னர் ஸி. ஆர். கூறினார். வைஸ்ராயின் ஆலோசனைக் குழுவில் பல காங்கிரஸ் தலைவர்களை நியமிக்க வேண்டும் என்று சென்னை மாகாணப் பிரதமமந்திரி கேட்டார். இதற்குலின்லித்கோ கிணற்றில் கல்லைப் போட்டது போலிருந்தார்.

சென்னை திரும்பும் வழியில் வார்தாவில் இரண்டு மணி நேரம் தங்கி மகாத்மாவுடன் பேசினார் ஸி. ஆர். பேச்சின் ஒரு பகுதி, ஸி.ஆர். பதவி துறந்தால் பின்னர் என்ன செய்ய வேண்டும் என்பது குறித்தே அமைந்திருந்தது. ஸி. ஆர். உபநிஷதங்களுக்கு உரை எழுதுவார் அல்லது ஹிந்துஸ்தானியை எதிர்த்தவர்களைச் சிறை வைத்ததற்குப் பிராயச்சித்தமாகத் தாமே ஹிந்துஸ்தானி பயில்வார் என்றே மகாத்மாவின் காரிய தரிசி மஹாதேவ தேசாய் எண்ணினார். ஆனால் ஸி. ஆர். கைவினைஞர்களை உருவாக்கும் ஆசிரியனாகப் பணியாற்றத் தாம் விரும்புவதாகத் தேசாயிடம் தெரிவித்தார்!

வைஸ்ராய் காங்கிரஸுக்கு அளித்த பதிலிலிருந்து, போர் முடிந்ததும் இந்தியாவுக்கு முழுச் சுதந்திரம் கிடைக்காது, ஆனால் புதியதொரு அரசியல் சாசனத்தை உருவாக்குவதற்கான பேச்சு வார்த்தைகள் அப்போது தொடங்கும் என்று தெரிய வந்தது. யுத்தம் நீடிக்கும்வரை ஓர் அலங்காரமான, அதிகாரம் ஏதுமற்ற ஆலோசனைக் குழு செயல்படலாம். இந்தியாவுக்கு பிரிட்டிஷ் வல்லரசின் மேலாதிக்கத்துக்குட்பட்ட சுயாட்சி அளிப்பதே பிரிட்டனின் இறுதி நோக்கம் என்றும் தெரிவிக்கப்பட்டது.

தன் தீவிர வாதத்தை நியாயப்படுத்த இந்த அறிக்கை ஒன்றே போதுமென்று கருதினார் சுபாஷ் போஸ். 'ரொட்டிக்குப் பதிலாகக் கல்லைக் கொடுப்பதற்குச் சமானமான செயல்' என்றார் காந்தி. வைஸ்ராய் தம்மைச் சந்தித்த பல்வேறு இந்தியர்களின் மாறுபட்ட கருத்துக்களை அனாவசியமாகப் பெரிது படுத்தியிருந்தார். இது பிரிட்டிஷாரின் பிரித்தாளும் தந்திரத்தையே காட்டுவதாகக் கருதினார் காந்தி. சிமன்லால் ஸெடல்வாட், தேஜ் பகதூர் சாப்ரு போன்ற மிதவாதிகளும், தாங்கள் வஞ்சிக்கப்பட்டதாகவே கருதினர். ஸி. ஆர். கூறினார்: ''இவ் அறிக்கை

பெருத்த ஏமாற்றத்தை அளித்துள்ளது. ஒரு மிகப் பெரிய அசாதாரணமான வாய்ப்பு தூக்கி எறியப்பட்டுள்ளது.''

காங்கிரஸின் அனுதாபம் நேச நாடுகளின் பக்கமே இருந்தது. அதன் அரசியல் நிபந்தனைகள் யுத்தம் மூண்ட பிறகு திடீரென்று எழுப்பப்பட்டவையும் அல்ல. ஒவ்வொரு சட்டசபைக் கூட்டத்திலும் ஸி.ஆர். உள்படப் பல மாகாணக் காங்கிரஸ் பிரதம மந்திரிகள் மத்தியில் புதியதோர் அரசியல் சாசனம் உருவாவதில் முன்னேற்றம் ஏற்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்தனர். கட்சித் தீர்மானங்களும் எப்போதும் இதையே குறிப்பிட்டன. மேலும், தன் இலட்சியங்களை எடுத்துச் சொல்லாமல் காங்கிரஸ் பிரிட்டிஷ் அரசுக்கு நிபந்தனை எதுமற்ற பூரண ஆதரவு அளித்திருந்தால் அது தன் அடிப்படைக் கொள்கையையே விட்டுக் கொடுத்ததாக ஆகியிருக்கும். நாளிதழ்களில் தலைப்புச் செய்திகளும், வானொலி ஒலிபரப்புகளும் யுத்தத்தைப் பற்றியே நினைவூட்டிக் கொண்டிருந்த போதிலும் இந்திய சுதந்திரமே ஐரோப்பிய யுத்தத்தைக் காட்டிலும் சாமானிய இந்தியனுக்கு முக்கியமாகத் தோன்றியது. காங்கிரஸுக்கு இருந்த இந்த தர்ம சங்கடத்தைப் பிரிட்டிஷ் அரசு நன்கு அறிந்திருந்தது. அக் காலக்கட்டத்தில் எழுதப்பட்ட கடிதங்களையும் இதர குறிப்புக்களையும் ஆராயும்போது அவற்றுள் எதுவும் காங்கிரஸின் கோரிக்கைகள் பிரிட்டிஷ் அரசுக்கு வியப்பூட்டின என்றோ, எரிச்சலூட்டின என்றோ கருத முடியவில்லை. மாறாக கோப்புகளைக் கவனித்தால் பிரிட்டிஷ் அரசுக்கும் காங்கிரஸுக்கும் இடையே இருந்த நல்லுறவு முறிவதையும் மாகாண காங்கிரஸ் மந்திரி சபைகள் மூட்டை கட்டுவதையும் பிரிட்டன் எதிர்பார்த்ததாகவே தோன்றுகிறது. இந்நிலை மகிழ்ச்சியைத் தராவிட்டாலும் பிரிட்டனுக்கு மன நிம்மதியைத் தந்ததை அறிகிறோம்.

காங்கிரஸின் கோரிக்கைகள் நிராகரிக்கப்பட்டபின், ஒன்று அது மாகாணங்களில் பதவி இழக்க வேண்டும் அல்லது தன்னை ஆதரித்த மக்களிடையே கௌரவம் இழந்து நிற்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. முடிவு எடுப்பது சிரமமாக இல்லை. யுத்தமும் அதையொட்டிய நெருக்கடி நிலைச் சட்டமும் மாகாண காங்கிரஸ் மந்திரி சபைகளை மத்திய அரசின் கைப்பொம்மையாக மாற்றிவிடும். மாகாண மந்திரிகளை மத்திய அரசு முட்டாள்களாக்கும் சாத்தியக் கூறு ஒவ்வொரு நாளும் அதிகரித்து வந்தது. எனவே, எட்டு மாகாணங்களிலும் மந்திரி சபைகள் ராஜினாமா செய்ய வேண்டும் என்று முடிவெடுத்தது காங்கிரஸ்.

(தொடரும்)

தமிழாக்கம் : சீதா ரவி

# பளு தூக்கினார்கள்; தமிழகத்தின் பெருமையை உயர்த்தினார்கள்!

ஒருசினிமாநட்சத்திரம்கூடத்தோற்றுப் போய்விடும் அளவுக்கு பி. டி. உஷா இன்று அவ்வளவுபிராபல்யம்! புதுதில்லி ஜவாஹர் லால்நேருஸ்டேடியத்தில்உஷா உக்கிரமாகப் பயிற்சி செய்து கொண்டிருந்த போது இளம் நங்கைகள் பலர் அவரைப் பின் தொடர்ந்து ஓடினார்கள்! எல்லாம்கையெழுத்துவேட்டை தான்! உஷாவை மடக்க ஒருத்தி குறுக்கே புகுந்து ஓட, இன்னொருத்தி அடித்த கமெண்ட்: "சீ! உஷாவுக்கு முன்னதாக ஓட உனக்கு வெட்கமாயில்லே!"

கோச் நம்பியாரின் முகம் மலர்கிறது. உஷாவின் வெற்றிகளுக்கெல்லாம் முக்கிய காரணம் இவர் அளித்து வரும் தீவிரப் பயிற்சிதானே!

தேசிய விளையாட்டுப் போட்டியின் தொடக்கநாளன்றுபி.டி.உஷாதான் அத்தனை விளையாட்டுக் கலைஞர்கள் சார்பிலும் உறுதி மொழி எடுத்துக் கொண்டார். உஷாவுக்கு இந்த உயர் கௌரவம் தரப்பட்டது பற்றி ஒரு முணுமுணுப்பு யாரிடமும் கிடையாது. அனைவருக்கும் மகிழ்ச்சிதான். உஷாதான் இன்று இந்திய விளையாட்டு உலகின் முடிசூடா சக்கரவர்த்தினி!

### அரசியல் இல்லாமலா?

ஆசிய விளையாட்டுக்களை நடத்த ஏராளஸ்டேடியம்கள் கட்டிப் போட்டாலும்போட்டார்கள். அதை அவ்வவ்போது பயன்படுத்த வேண்டாமா? தேசிய விளையாட்டுப் போட்டிகள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. ஒரு வருஷம் விட்டு ஒரு வருஷம் நடக்கும். ஆசிய விளையாட்டுக்களுக்கும் ஒலிம்பிக் போன்ற சர்வதேசப் போட்டிகளுக்கும் சிறந்த விளையாட்டு வீரர்களைத் தேர்ந்தெடுக்க இந்தத் தேசியப் போட்டிகள் உதவும். ஒலிம்பிக் கழகத்தின் ஆதரவில் நடக்கும் தேசியப் போட்டிகளுக்கு 20 லக்ஷம் ரூபாய் மானியம் வழங்கப்பட்டுள்ளது. ஒலிம்பிக் கழகத்தின் போக்கு ஏற்கெனவே கடுமையான விமர்சனத்துக்கு உள்ளாகிவிட்டது! அரசியல் புகுந்து விளையாடுவதாக குற்றச்சாட்டுக்கள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. 'அப்பாடா!' என்று நாமும் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறோம். விளையாட்டு எப்படியோ, இந்த விவாதங்களாவது சூடு பிடிக்குமல்லவா?

### சிரிக்கும் புலி!

ஆசிய விளையாட்டுக்கு அப்பு என்றால் தேசிய விளையாட்டுக்கு ராஜு — சிரிக்கும் புலி! இதற்கு என்ன பெயர் சூட்டுவது என்று யோசித்தபோது 'ராஜா' என்றால் சிங்கத்தைக் குறிக்கும் என்பதால் ராஜு என்று மாற்றிவிட்டார்கள்! சிரிக்கும் புலி உலக அரங்கில் சிறக்க வேண்டும், சிரிப்பாய்ச் சிரித்துவிடக் கூடாது என்பது நம் பிரார்த்தனை. இது போன்ற விளையாட்டுக்



அகிலன்

தேவன்

முத்துசாமி



தமிழ்ச் செல்வன்



* விளையாட்டு கலைஞர்களின் அணிவகுப்பு




* இந்திரா காந்தி சமாதியிலிருந்து அணையா ஜோதியை ஏற்றி அளிக்கிறார் பாரதப் பிரதமர். இங்கிருந்து ஜவாஹர்லால் நேரு ஸ்டேடியத்துக்கு விளையாட்டு வீரர்களால் அது கொண்டு போகப்பட்டது.

களில் ஜோதியை ஏற்றிக் கொண்டு ஓடிப் போய் ஸ்டேடியத்தில் ஜோதியை ஏற்றுவது என்று ஒரு சடங்கு. அது இப்போதும் நிறைவேறியது. ஆனால் பாவம், தில்லி குளிரில் இந்த ஜோதி அடிக்கடி மரணமுற்றது! அதற்கு அவ்வப்போது உயிர் கொடுத்து ஒருவழியாக ஜவாஹர்லால் நேரு ஸ்டேடியத்துக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள். ஆனால் இங்கேயும் அணையா ஜோதியை கையிலிருந்த அணைந்துவிட்ட ஜோதியால் ஏற்றி வைக்க முடியாமல் கமல ஜித் சாந்துவும் சத்பாலும் வேறு புதிய ஜோதி ஏற்றிக் கொண்டு வரப்படும் வரை சிவனே என்று காத்திருந்தார்கள்.

## ஊசலாடிய பதக்கம்!

ஆஸ்திரேலியாவில் நீச்சல் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த வில்சன் செரியன், தமிழக ஒலிம்பிக் தலைவர் கொடுத்த ரூ 16,500 செலவில் தமிழகக் குழுவுக்குத் தங்கப் பதக்கம் பெற்றுத் தரப் பறந்து வந்தார். கேரளத்தில் பிறந்து வளர்ந்து ரயில்வே ஆட்டக்காரரான இவர், தமிழகத்தின் செலவில் வந்தாலும் தமிழக ஆட்டக்காரராகி விட முடியாது என்று ஆட்சேபணை எழுந்தது. தங்கப்பதக்கம் கேரளத்துக்கும் தமிழகத்துக்கும் இடையில் ஊசலாடியது. கடைசியில் இந்திய ஒலிம்பிக் சங்கத் தலைவர் வி.ஸி. சுக்லா தங்கப் பதக்கம் கேரளத்துக்கே என்று தீர்ப்பு வழங்கி விட்டார்! ஹூம்.

## குளிர்ந்துவிட்ட டெலிபோன் — சூடான செய்தி!

ஜவாஹர்லால் நேரு ஸ்டேடியத்தின் பத்திரிகையாளர் பகுதியில் முதல் நாளன்று டெலிஃபோன்கள் இயங்காததால் வேறு பல ஸ்டேடியங்களில் நடந்து கொண்டிருந்த போட்டிகள் பற்றிய ரிஸல்ட்கள் எதுவும் நேரத்தோடு கிடைக்கவில்லை. அன்று பத்திரிகைகள் கொடுத்த சூடான தலைப்புக்கள் டெலிபோன் இலாகாவை உசுப்பிவிட மறு நாளிலிருந்து விளையாட்டுத்தனமாக நடந்து கொள்ளாமல் நன்கு இயங்கியது.

## தமிழகத்துக்குப் பெருமை

வித்யா ராமச்சந்திரன், விஜயலக்ஷ்மி, ஷோபா அடங்கிய தமிழ்நாடு டேபிள் டென்னிஸ் பெண் குழு, டீம் சாம்பியன்ஷிப்பில் வெண்கலப் பதக்கம் பெற்றது. தமிழகத்துக்குப் பதக்கங்கள் கிடைக்காமல் போய் விடுமோ என்ற கவலைச் சுமையை இறக்கி வைத்து பெருமை தேடித் தந்தவர்கள் பளு தூக்கும் குழுவினரே! நாலு தங்கம், ஒரு வெள்ளி, இரண்டு வெண்கலம் — போதுமா? இவற்றுள் முதல் தங்கப் பதக்கத்தை தட்டிச் சென்ற முத்துசாமி இந்திய கடற்படையில் பணியாற்றுகிறார் — இப்போது பம்பாயில். இவரது சாதனை ஒன்று காமன்வெல்த் ரிகார்டை முறியடித்திருக்கிறது. தங்கப் பதக்கத்தைப் பெற்ற மற்றொருவர் அகிலன், ஐ.ஸி.எஃப்பில் பணியாற்றுகிறார். தங்கம் கண்ட இவ்விருவருமே இன்னமும் பிரும்மசாரிகள்! — சொல்லி வைக்கிறேன்! தங்கப் பதக்கம் சூடிய மற்றொருவரான தமிழ்ச்செல்வனும் ஐ.ஸி.எஃப்பில் பணிபுரிகிறவர் தான். இவருக்கு ஏற்கெனவே திருமணமாகி ஒரு மகனும் இருக்கிறான். 1978லேயே அர்ஜுனா விருது பெற்றவர். நான்காவது தங்கப் பதக்கம் சூடிய ஜி. தேவன் தென்னிந்திய ரயில்வேயில் டிக்கெட் கலெக்டர். சென்ற ஒலிம்பிக்கில் பங்கு பெற்றிருக்கிறார். 84ஆம் ஆண்டின் தேசிய சாம்பியன் விருது பெற்றும் இருக்கிறார். தமிழகத்துக்குப் பெரும் புகழ் தேடித் தந்துள்ள பளு தூக்கும் கலைஞர்களை வாழ்த்தும்போது அவர்களுக்கு உத்யோக மளித்ததுடன் உற்சாகப்படுத்தியும் வரும் ரயில்வே நிர்வாகத்தையும் போற்றத்தானே வேண்டும்.

— குண்டுமணி



# மாறுதலுக்கு மாற்றுமொழி

## காயத்ரி தேவி என்டே அம்மே (மலையாளம்)

அம்மா இல்லாத பிள்ளை. கொஞ்சம் அதிகாரமான அப்பா. தாய்ப் பாசத்திற்காக ஏங்கும் வளர்ந்த அந்தக் கல்லூரிப் பையன். நண்பனின் அம்மாவிடம் கூடத் தாய்மையை எதிர்பார்த்து ஏங்குகிறான். வெகு சுலபமாய்க் காயப்படுகிறான். அப்புறம் பெங்களூர் போய் அப்பாவின் நண்பர் வீட்டில் தங்கி, அங்கேயும் தாய்ப் பாசத்திற்காக ஏங்கி, ஏமாற்றப்பட்டு என்று நீளமாய்ப் போகிறது கதை — இடைவேளைவரை.

அப்புறம் ப்ராட்கேஜிலிருந்து மீட்டர் கேஜிற்கு மாறி — அப்பாவின் பூர்வ கதை என்று கூட்ஸ் ரயில் போல் நிதானமாக நீளமான ஃப்ளாஷ்பேக்—இடைவேளைக்கப்புறம்.

இரண்டு பகுதிகளும் தமிழும் சிங்களமும் போல் ஒன்றோடு ஒன்று நட்பில்லாமல் தனித் தனியே நிற்பதால் இரண்டு சினிமா பார்த்த அயர்வு.

அப்புவாய் வரும் ரெஹ்மான் மனத்தில் நிற்கிறா். எத்தனை உணர்ச்சிகள் அவர் முகத்தில்!

கோக்கப்படாமல் விட்டுப் போன சில பாத்திரங்களைப் பற்றி (ரோகிணியின் பாத்திரம் அதில் ஒன்று) தனியே புலம்பாமல் விடுவோம்.

சோம்பலான படம்.

## SILVER DREAM RACER (ஆங்கிலம்)

மோட்டார் சைக்கிள் ரேஸ்களை அற்புதமாய்ப் படம் பிடிக்க ஒரு காமிரா. மண்ணும் கல்லும் கலந்த மலைச்சரிவில் கூடச் சாகசமாக மோ. சைக்கிள் ஓட்டத் தெரிந்த ஸ்டண்ட் வீரர்கள். அதிர அதிர பாப் மியூஸிக் போடத் தெரிந்த இசையமைப்பாளர்.

இத்தனையும் கிடைத்துவிட்டால் போதுமா?

இன்னும் கொஞ்சம் விறுவிறுப்பாய்க் கதையை அமைக்கத் தோன்றாமல் போனது




யார் துரதிர்ஷ்டம்?

ரேஸ்களில் கலந்து கொள்ளும் ஆர்வமும், ஜெயிக்கும் வெறியும் இருந்தும் ஒரு வலிமையான பைக் இல்லாததால் தோற்று விடும் நிக் ஃப்ரீமேன் எனும் இளைஞனைச் சுற்றிக் கதை. விபத்தில் இறந்துவிட்ட அண்ணனின் அருமையான மோ. சைக்கிள் கைக்கு வர அதை வைத்துக் கொண்டு பயிற்சி செய்கிறான். அவனுக்கு ஆதரவு தர, ஊக்கம் தர ஒரு பெண். கடைசி கடைசியாக உலக சாம்பியன் போட்டியில் நிக் கலந்து கொள்ளும் காட்சி வெகு அற்புதமான சிறுகதை.

காமிரா நம்மை நேரே ரேஸ் கோர்ஸில் கொண்டு போய் உட்கார்த்திவிடுகிறது. தலை தெறிக்கும் வேகத்தில் மோட்டார் சைக்கிள்கள் நம்மை வெகு அருகில் கடந்து போக, ஒவ்வொரு மோ. சைக்கிளாய் ஓவர் டேக் செய்து கொண்டு வரும் நிக் வெற்றிக் கம்பத்தை முதலாவதாய்த் தொட்டுத் தாண்டி.... அப்புறம்தான்......

வேண்டாமே, கடைசி சஸ்பென்ஸாவது படத்தின் சுவாரஸ்யத்தைக் காப்பாற்றட்டும்!

## THE IRONHAND BOXER (ஆங்கிலம்)

குங்ஃபூ கலையைத் திரையில் விற்பனை செய்யும் இன்னொரு படம். கையைக் காலை அசைப்பார்கள். பின்னணியிலிருந்து 'களுக், மளுக்' என்று மரக்கிளை முறியும் சப்தம். நிஜமாகவே எலும்புகளில் அத்தனை வலிமையா இல்லை கேலியா என்று புரியவில்லை.

கதை (?) என்ன? டப்பிங் ஆங்கிலத்தில் பாதி விளங்கவில்லை. அவசியமுமில்லை. முக்கியமாய் என்ன தேவை?

ஹா.... ஹூ.... டு ஷூம்..... விஷ்க்.... என்று காஃபி பெர்குலேட்டர் போல் நினைத்த போது சப்தம் போட்டுக் கொண்டு எட்டடி உயரம் எம்பி எம்பிச் சண்டை போடும் காட்சிகள். கேட்டதற்கு அதிகமாகவே காட்டுகிறார்கள்.

போனால் போகிறதென்று சமூக விரோதி நல்லவர்களை மர்மமாய்க் கொன்றவன் — அவனைப் பழி வாங்கும் இளைஞன் என்று நூலிழை கட்டமனுக்கு அவ்வப்போது கதை சொல்வதோடு சரி.

கைகளில் அதிக வலிமை வரவேண்டும் என்பதற்காக இரும்புக் கம்பிகளால் உடம்பு முழுக்கச் சுற்றிக் கொண்டு மரக்கிளைகளில் கட்டித் தொங்கிக் கொண்டு என்று சில புதுமையான காட்சிகள்.

க்ளைமாக்ஸ் ஜீவனில்லாமல் பாதியில் நிற்பது போல் தோன்றுகிறது.

கராத்தே, குங்ஃபூ மாணவர்களுக்கு சுவாரஸ்யமான டாக்குமெண்டரி.

— ஜெயமன்மதன்



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani    Editor: K. Rajendran



இந்த இதழில் சிறப்புக் கட்டுரை :

# மின்வெட்டு ஒழியுமா? கல்பாக்கம் உதவுமா?

புகைப்படம் : கல்பாக்கம் அணுமின் நிலையத்தில் கண்ட்ரோல் அறை.

வண்ணப்படம் : யோகா.